கண்ணீர் விடுவதெற்கென்றே கடவுளால் படைக்கப்பட்டவள் இந்த அபாக்கியவதி! ஆனால் கண்ணீரின் சக்தி ?

மாடர்ன் தியேட்டர்ஸ்

# திகம்பர சாமியார்

லட்சக்கணக்கான மக்களின் லட்சிய எழுத்தாளர் வடுவூராரின் மகோன்னத கற்பனைச் சித்திரம்——

செப்டம்பர் 22 முதல்

டி. ஆர். சுந்தரம்

## ஹெர்குலஸ் சைகிள்கள் இந்தியாவில் சிறந்த நிலைமையில் வருகின்றன என்பது எவ்விதம்




முப்பது வருஷகால அனுபவத்தின் பயனாகக் கையாளப்படும் விசேஷ பாக்கிங் முறையினால் சற்றும் அப்பழுக்கற்ற நிலையில் ஹெர்குலஸ் சைகிள்கள் உங்களுக்கு வந்து சேருகின்றன. சேர வேண்டிய இடத்தில் சுலபமாகவும் பத்திரமாகவும் கிரமமாகவும் சைகிள்களைப் பூட்டும் வண்ணம் அதன் பாகங்களைத்தும் ஒழுங்காகக் கட்டப்பட்டு உறுதியான பெட்டிகளில் மிக ஜாக்கிரதையாக வைத்து அனுப்பி வைக்கப் படுகிறது.

ஹெர்குலஸ் சைக்கிளை பாக் செய்து வெளியே அனுப்பப்படும் இலாகாவின் தோற்றம்



இன்றைய சைகிள்களில்
மிகவும் சிறந்தது

# Hercules

# ஹெர்குலஸ்

THE HERCULES CYCLE & MOTOR COMPANY LTD.
BIRMINGHAM ENGLAND.



எல்லா பிரபல வியாபாரிகளிடமும் கிடைக்கும்

EAS/12/54/



# "எச்.எம்.வி."

## இம்மாதத்திய புதிய வெளியீடு!

**ஸ்ரீ ஜி. ராமனாதன்**

N.28183 கண்ணன் என் சேவகன்
2 பாகங்கள்
(ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி)

**ஸ்ரீமதி என். கேஸி**
(புல்லாங்குழல்)



N.18974
- மருகேலரா — ஜயந்த ஸ்ரீ
- நெனருன்சினானு — மாளவி



சிட்டாடலின்
## "இதய கீதம்"
பாட்டுகள்

**ஸ்ரீமதி பி.ஏ. பெரிய நாயகி**
**ஸ்ரீமதி ஏ.பி. கோமளா & பார்ட்டி**
N.28188
துள்ளி துள்ளி மானே
2 பாகங்கள்

**ஸ்ரீமதி பி.ஏ. பெரிய நாயகி**
N.28189
ஜனனி ஸ்ரீ கௌரி
ஓ! மாயாஜால கலை மானே

ஸ்ரீ கிருஷ்ணா புரொடக்ஷன்ஸ் தயாரித்த
## "சந்திரிகா"
பாட்டுகள்

**ஸ்ரீமதி பி.ஜி. கிருஷ்ணவேணி (ஜிக்கி)**

N.28190
- உள்ளம் விளையாடுதே
- கண்ணில் விளையாடும்




## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்
கல்கத்தா - பம்பாய் - மதராஸ் - டில்லி




முப்பது வயதுகூட நிரம்பாத போதிலும் அவள் வயது சென்றவளாயும் நோயாளியாகவுமே காணப்பட்டாள். பள்ளியிலும், கலாசாலையிலும் அவள் ஒரு வீராங்கனையாகத் திகழ்ந்தது அவள் சிநேகிதிகள் மட்டுமே அறிவர். பெருமூச்சும் இரைப்புமாக அவள் தெருவோடு செல்வதைப் பார்த்த அன்னியர்கள் நம்பவில்லை. ஆனால் அவளது ஊளைச் சதையெல்லாம் கரைந்து மறைந்த பின்னர் 10 வயது குறைந்து யௌவனத்துடன் காணப்பட்டாள்-அதன் ரகசியம்-"க்ருஷன்."

இயற்கையான அழகிய தோற்றத்தையும் யௌவனத்தின் சோபையும் பெரிதாகப் பாவிக்கும், ஆனால் ஊளைச் சதையினால் அவதிப்படும் ஒவ்வொரு ஸ்திரீயும் இவ்வார்த்தைகளை நன்கு கவனிக்க வேண்டும்.

க்ருஷனில் சேர்ந்துள்ள ஆறுவித இயற்கை லோக சத்துக்கள், சரீரத்தின் ரத்த ஓட்டத்திலிருந்து வடிகட்டப்பட்ட விஷங்களையும், ஜீரணத்திற்குப் பிறகுள்ள கழிவு பதார்த்தங்களையும் வெளித்தள்ள, அவயவங்களுக்கு உதவுவதன் மூலம் ஊளைச் சதையின் மூலகாரணத்தை எதிர்த்துப் போராடுகின்றன. கழிவு பதார்த்தங்களும் விஷப் பொருள்களும் அபரிமிதமாக ஒன்று சேரவிடப்பட்டால் உடம்பின் ரசாயனக் கலவை மூலம் கொழுப்பாக மாறுகின்றன. தொடர்ச்சியாகக் கொஞ்ச காலம் க்ருஷன் உட்கொண்டால் அது அதிகப்படியான பருமனைக் குறைத்து, மூத்திரக் காய்கள், சரீர குடல்கள் இவற்றின் இயற்கையான சலனத்தைத் தூண்டுகிறது. ரத்தம் சுத்திகரிக்கப்பட்டு ஆரோக்கியம் ததும்புகிறது. யௌவனத் தோற்றத்தைப் பெறுவதோடு யௌவன உணர்ச்சியையும் பெறுகிறீர்கள். அதாவது நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியை அடைகிறீர்கள். முதலில் ஒரு பாட்டில் வாங்குங்கள். உங்கள் கடைக்காரரிடமும் கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும். "க்ருஷன்" விலை ரூ. 1-10-0.

"க்ருஷன்" ஈ. க்ரிபித்ஸ் ஹ்யூஸ், லொ., லிட். (மான்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப் பட்டது. விநியோகஸ்தர்கள்: கார் அண்டு கம்பெனி, லிமிடெட் பம்பாய், கல்கத்தா, மதராஸ்.




# நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்

# உமா ஆபரணங்கள்

*10 Years' Guaranteed*

























★

அசல் தங்கத் தகட்டினால் மிஸ்ரம லோகக் கம்பி மீது மூடப்பட்டு தயார் செய்தவை

பத்து வருஷம் உத்திரவாதம்
கேட்லாக் இலவசமாக அனுப்பப்படும்

★

வளையல் விலை விபரம்:

2 இஞ்சி வளையல்
ஜதை 1க்கு ரூ. 8-0-0

2·2 இஞ்சி வளையல்
ஜதை 1க்கு ரூ. 8-8-0

2·4 இஞ்சி வளையல்
ஜதை 1க்கு ரூ. 9-0-0

வி. பி. பார்ஸல் சார்ஜ் அணா 16 மாத்திரம்

★

## உமா கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

உமா மஹால் - மசூலிப்பட்டணம்

லாவண்யா பிக்சர்ஸ்

# பாரிஜாதம்

## பாமா விஜயம்

உங்கள் அபிமான நக்ஷத்திரங்கள் நடித்தது

டைரக்ஷன்.

K.S. கோபால கிருஷ்ணன்

ஸ்ரீ பாரவணி வெளியீடு

லாவண்யா பிக்சர்ஸ் லிமிடெட், எழும்பூர், சென்னை 8.

ரிஜிஸ்டர்டு

# கோத்ரெஜ் நெ.1 நெ.2

Godrej No.1 No.2

## டாய்லெட் (ஸ்நான) சோப்புகள்

பொருக்கி எடுக்கப்பட்ட புஷ்டி யளிக்கும் தாவர எண்ணை களையும் இதர மூலங்களையும் சேர்த்து புகழ் வாய்ந்த சிறந்த முறையில் பிரத்யேகமாய் திறம் பட தயாரிக்கப் படுகின்றன. அவைகளின் பரிமளம் கமழும் சிறந்த நுரையே அழகை யூட்டி கிருமிகளையும் கொல்லுகிறது.





நெ. 1 — இப் பெரிய கட்டி பணத்திற்கேற்ப உத்தமமான மதிப்பு வாய்ந்தது. உங்களுடைய ஸ்நானங்களில் நீங்கள் திருப்தியைக் காண்பீர்கள்.

### கவனியுங்கள்

இந்த சௌந்தரீய சோப்புக்கள் சாஸ்த்ரீய முறைப்படி பரிசுத்த மானவை என்றும் நன்மை பயக்கு பவை என்றும் நிரூபிக்கப் பட்டிருக் கின்றன. சில சோப்புகள், தவறுத லாக, பரிசுத்த மானவைகளாக கருதப்படுகின்றன. ஏனெனில் உதாரணமாய் பார்ப்பதற்கு பளிங்குபோல் தென்படுவதினால்; இது அவைகளின் பரிசுத்தத் திற்கோ அல்லது தரத்திற்கோ எவ்வித அறிகுறியுமாகாது.

## ஆராய்ந்தறிந்தோர் உபயோகிக்கும் சோப்புகள்



கோத்ரெஜின் இதர உயர்ரக தயாரிப்புகள்

ஷேவிங் ஸ்டிக், கிளிசரின்

ஷேவிங் 'ரவுண்டு' கூந்தல் தைலம்

**100 சதம் தூய்மைக்கும் மிருகக் கொழுப்பற்ற தென்பதற்கும் உத்தர வாதமானது.**

கோத்ரெஜ் சோப்ஸ், லிட்.-மதராஸ்: 164, பிராட்வே; கொச்சின்: 6/36, கல்வத்தி





மலர் 10 இதழ் 8 | செப்டம்பர் 24 | விக்ருதி புரட்டாசி 8




*"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.*

# புலித் தோல் போர்த்த பசு!







அவ்வாறு புலியைப் போல் பாய முற்பட்ட தாண்டன்....




.... கடைசியில் பசுவைப் போல் சாதுவாகி விட்டார்.



தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 10 கல்கி இதழ் 8

# என்ன சேதி ?

## எழுத்தாளருக்கு

செப்டம்பர் 30உயை நினைவு கூறும்படி திருவாளர் எழுத்தாளருக்கு விண்ணப்பம் செய்து கொள்கிறோம். அகில உலகச் சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்ப அன்றுதான் கடைசித் தேதி. சிறுகதைப் போட்டி தமிழ் நாட்டுக்குப் புதியதல்ல; பலமுறை நடந்திருக்கிறது. ஆகையால் கொஞ்சம் சப்பிட்டுப் போயிருக்கிறது என்றும் சொல்லலாம். எனினும் இந்த உலகச் சிறுகதைப் போட்டியில் தமிழ் எழுத்தாளர்கள் ஊக்கம் காட்டாமல் இருந்துவிடக்கூடாது. தமிழ் நாட்டு எழுத்தாளருக்கு அகில இந்தியாவிலும் உலகத்தின் முன்னிலையிலும் ஓர் இடம் தேடிக் கொடுக்கக்கூடிய போட்டி இது. தமிழ்எழுத்தாளர்கள் எங்கே இருந்தாலும் இந்த உலகச் சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பலாம். ஆனால் செப்டம்பர் 30உக்குள் அனுப்பிவிட வேண்டும். இந்தப் போட்டிக்காக வரும் சிறு கதைகளைப் பரிசீலனை செய்து சிறந்த நாலு கதைகளைப் பொறுக்கி எடுப்பதற்குப் பின்வரும் மூன்று அறிஞர்கள் நீதிபதிகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் :—

1. பிரின்ஸ்பால் கே. சுவாமிநாதன்,
   கவர்ன்மெண்ட் ஆர்ட்ஸ் கலாசாலை.
2. பேராசிரியர் ஏ. சீனிவாசராகவன்,
   விவேகானந்தா கலாசாலை.
3. ஸ்ரீ பெரியசாமித் தூரன்,
   ஆசிரியர், கலைக் களஞ்சியம்.

இவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் நாலு கதைகளுக்கும் ஒவ்வொன்றுக்கு ரூபாய் இருநூற்றைம்பது வீதம் பரிசு அளிக்கப்படும். பிறகு அவை அகில இந்தியப் போட்டிப் பரிசீலனைக்காக அனுப்பி வைக்கப்படும். இந்தப் போட்டியின் மற்ற விதிகளை வேறு பக்கத்தில் காணலாம்.

## பாபநாசம் சிவன்

தமிழுக்குப் பலரும் பல துறைகளில் தொண்டாற்றி வருகிறார்கள். இசைத் துறையில் புதிய தமிழ் சாஹித்யங்களை இயற்றிச் சிலர் தொண்டு புரிகிறார்கள். அவர்களில் ஸ்ரீ பாபநாசம் சிவன் தலைசிறந்து விளங்குகிறார். நம்முடைய காலத்தில் வெளியான தமிழ் சாஹித்யங்களில் அமரத்வம் பெற்றவை என்று சொல்லக்கூடிய சில கீர்த்தனங்கள் பாபநாசம் சிவன் இயற்றியவை. "காணக் கண் கோடி" "காபாலி" "கடைக் கண் நோக்கி" முதலிய கீர்த்தனங்கள் அத்தகைய சிரஞ்சீவிக் கீர்த்தனங்கள். பாபநாசம் சிவன் உயர்ந்த சங்கீத பரம்பரையில் ஊறித் திளைத்து அபாரமான சங்கீத ஞானம் பெற்றவராதலால் அவருடைய தமிழ் சாஹித்யங்கள் தனிச் சிறப்புடன் விளங்குகின்றன. பரம பக்தரும் பெரியாருமான பாபநாசம் சிவன் அவர்களுக்கு இந்த செப்டம்பர் 24உ சஷ்டியப்த பூர்த்தி வைபவம் நடைபெறுகிறது என்று அறிந்து நேயர்கள் மகிழ்ச்சியடைவார்கள். ஸ்ரீ பாபநாசம் சிவன் இன்னும் நெடுங்காலம் வாழ்ந்து இசைக் கலைக்குத் தொண்டு புரியுமாறு இறைவன் அருள் புரியட்டும்.

## 'உற்பத்தியைச் சுருக்குங்கள் !'

சென்னைச் சட்டசபையில் சென்ற வாரத்தில் ஒரு அபூர்வமான உண்மை வெளியாயிற்று. பத்து வருஷ காலமாக இந்த மாகாணத்தில் "உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்" என்ற அதி தீவிரமான இயக்கம் தலைபோகிற வேகத்தில் நடந்து வருகிறதல்லவா? சர்க்கார் மந்திரிகளும் உத்தியோகஸ்தர்களும் சேர்ந்து நடத்தி வருகிறார்கள் அல்லவா? இதன் மொத்த முடிவான பலன் என்ன தெரியுமா? ஆறு வருஷ காலத்தில் நெல் பயிராகும் நிலத்தில் ஏழு லட்சம் ஏக்கரா குறைந்திருப்பது

தான்! இப்படிக் குறைந்திருப்பதன் காரணம் என்ன என்று சென்னைச் சட்டசபையில் அப்பாவி அங்கத்தினர் சிலர் கேட்டதற்கு உணவு மந்திரி கனம் ரோச் விக்டோரியா "எனக்கும் அதுதான் தெரியவில்லை! பல காரணங்கள் இருக்கலாம்" என்றாராம். பல காரணங்கள் எதற்காகத் தேட வேண்டும்? குட்டிச் சுவரில் முட்டிக் கொள்ள வெள்ளெழுத்து அவசியமா? "உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்" நமது சர்க்கார் இலாகாக்களும் மந்திரிகளும் உத்தியோகஸ்தர்களும் பிரசாரகர்களும் செய்யும் தீவிரப் பிரசாரந்தான் காரணமாக இருக்க வேண்டும். கொஞ்சம் இவர்கள் பிரசார முறையை மாற்றிக் கொண்டு பார்ப்பது நலம். "உணவு உற்பத்தியைச் சுருக்குங்கள்!" என்று பிரசாரம் செய்யத் தொடங்கினால் ஒருவேளை உணவுப் பயிர் சாகுபடி அதிகமானாலும் ஆகலாம். சர்க்கார் அதிகாரிகள் சொல்வதற்கு நேர்மாறான காரியத்தை நம் ஜனங்கள் செய்வார்கள் என்று எதிர்பார்க்கலாம் அல்லவா? எப்படியிருந்தாலும் ஒரு மாறுதல் செய்து பார்ப்பது நல்லதுதானே!

# அக்கப்போர்

ஒரு பிரசங்கியிடம் சங்கக் காரியதரிசி ஒருவர் சென்று "தங்களுடைய பிரசங்கத்துக்கு மைக்கு வைக்கவேண்டுமா!" என்று கேட்டாராம்.

"அவசியம் மைக்கு வேண்டும். எல்லாம் உங்கள் நன்மைக்குத்தான் சொல்லுகிறேன்" என்றாராம் பிரசங்கி.

★

"மகாகவி பாரதியார் அமரரான செப்டம்பர் 11-ம் தேதி யன்றுதான் ஜனாப் ஜின்னா மரணமடைந்தார். அதே செப்டம்பர் 11-ம் தேதியன்று ஜெனரல் ஸ்மட்ஸ் காலமானார்."

இனிமேல் பாரதியார் பிறந்த தினத்தையே பாரதி விழாவாகக் கொண்டாடுவது உசிதம் என்று சிலர் கருதக் கூடும்.

★

"சமூக விரோதச் செயல்களில் ஈடுபடுவோருக்கு எதிராகப் பொது ஜனக் கருத்தை உருவாக்குவதில் முனையுங்கள். பொதுஜனங்களின் மனச்சாட்சியைத் தட்டி எழுப்புங்கள்!"

—ஒரு பிரசங்கி

பிரசங்கி அவர்களே, முதலில் உமது பிரசங்கத்தைக் கேட்பவர்களைத் தட்டி எழுப்புங்கள்!

★

"ஜலம் கண்டுபிடிக்கும் யோகிக்கு மற்றொரு வெற்றி கிடைத்திருக்கிறது. இந்தப் 'பானிவாலா மகராஜ்' ஜலசவாத் என்ற கிராமத்தில் ஓர் இடத்தைக் காட்டினார். அங்கு 40 அடி வெட்டிப் பார்த்ததும் ஜல ஊற்று இருந்தது."

—ராஜகோட் செய்தி.

ஜலசவாத் என்ற ஊரில் ஜலம் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிப்பது அப்படி என்ன கஷ்டமான காரியமா!

★

பானி மகராஜ்களைப் போலவே கறுப்பு மார்க்கெட்காரர்கள் எங்கே அரிசி மூட்டைகளை அடுக்கி வைத்திருக்கிறார்கள் என்பதை ஞானதிருஷ்டி மூலம் அறிந்து காட்டக்கூடியவர்களும் நமக்கு இப்பொழுது மிகவும் அவசியம். இப்படிப்பட்ட சக்தி உள்ளவர்களுக்கு 'அரிசி மகராஜ்' என்ற பட்டப் பெயரைக் கொடுத்து 'மகராஜனாக வாழ்வாய்' என்ற வாழ்த்தையும் அளிக்கலாம்.

சாஸ்திரீய சங்கீதத்தை, ரேடியோ நிகழ்ச்சிகளில், கவர்ச்சிகரமான முறையில் எப்படிப் பாடுவது என்பது பற்றிச் சமீபத்தில் ஆலோசிக்கப்பட்டதாம்.

ஏன் தியாகய்யர், தீக்ஷிதர் முதலானோர் கிருதிகளை நல்ல ஹிந்தி சினிமா மெட்டுகளில் அமைத்து ஒலி பரப்பினால் போகிறது.

★

கவுண்ட் அல்வாரோ டி. பிகூரியா டாரஸ் மெண்டியேடா ரோமனோனெஸ் என்ற ஸ்பானிஷ் அரசியல் வாதி காலமானாராம்.

—ஸ்பெயின் செய்தி.

அவர் யமலோகத்தில் நுழைந்து விட்டாரா என்று அறிய விரும்புகிறோம்.

★

"தபால் ஊழியர்களுக்கு நானாவித வசதிகள் செய்துதர கூட்டுறவு சங்கம் அங்குரார்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது."

சென்னைச் செய்தி.

அங்குரார்ப்பணம் போதுமா! அதற்கு வேண்டிய பணம் அல்லவா முக்கியம்!

★

முதல் மந்திரி ஸ்ரீ ராஜாஜி கோதுமை தான் சாப்பிடுகிறார்.

—ஒரு செய்தி

மகாராஜனாய்ச் சாப்பிடட்டும்!

★

"காஷ்மீரப் பிரச்னையில் பாகிஸ்தானை சீன தேசம் ஆதரிக்கவில்லை."

ஆதரிக்காமல் போனால் போகிறது. பார்த்துச் சீறாமல் இருந்தால் போதாதா!

★

சினிமாப் படங்களின் தரம் உயர வேண்டும்.

—கனம் திவாகர்.

எத்தனை பேர்களால் எத்தனை தரம் சொல்லப்பட்ட விஷயம் இது!

★

பொறுமையாக இருந்தால் நன்மை விளையும்.

—ஒரு எம். எல். ஏ.

நன்மையும் தீமையும் விளைந்தாலென்ன விளையா விட்டாலென்ன! சாமையும், கோதுமையும் அல்லவா விளைய வேண்டும்!

# நாடு நலம் பெற வேண்டும் நாஸிக் வழி காட்ட வேண்டும்

புனிதமான கோதாவரி நதியையும் பஞ்சவடி தபோவனத்தையும் அடுத்துள்ள நாஸிக்கில் புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் காந்தி நகரிலே ஐம்பத்தாறுவது காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் அமோக வைபவங்களுடன் ஆரம்பமாகியிருக்கிறது.

புனா—நாஸிக் ரஸ்தாவை அடுத்துச் சேரும் சந்தியுமாக இருந்த பிரதேசம் எல்லா வசதிகளும் பொருந்திய காந்தி நகரமாகக் காட்சியளிக்கின்றது.

ஏழுரை லட்சம் சதுர அடி விஸ்தீரணம் உள்ள பிரம்மாண்டமான பந்தலின் நடுவே, மலர்ந்த தாமரைப் பூவின் உருவத்தில் அமைக்கப் பட்டுள்ள மேடையின் மீது நமது அருமைத் தலைவர்கள் வீற்றிருக்கிறார்கள்.

காந்தி நகரின் சிகரமாக விளங்கும் சிங்கக் கோட்டை சிவாஜி அடைந்த மகத்தான வெற்றிகளின் ஞாபகார்த்தமாக அமைக்கப்பட்டிருக்கிறது.

## வதந்திகள் பொய்த்தன

காங்கிரசில் உள்ளுறப் புகைச்சலும் போராட்டமும் இருந்து வருவதாக வதந்திகள் உலாவின. தலைவர்களுக்குள் அபிப்பிராய பேதம் முற்றிவிட்டதாகக் கூறப்பட்டது.

காங்கிரஸ் அக்ராசனர் தேர்தலுக்கு முன்னால் ஸ்ரீ தாண்டனை ஸர்தார் பட்டேல் தாங்கி நிற்கிறார் என்றும், ஸ்ரீ கிருபளானியைப் பண்டித ஜவாஹர்லால் நேரு ஆதரிக்கிறார் என்றும் சிலர் சொன்னார்கள். ஸ்ரீ தாண்டன் அக்ராசனர் ஆகிவிட்டால், ஜவாஹர்லால்ஜி பிரதம மந்திரி பதவியைக் கூட விட்டு விடுவார் என்றும் சொல்லப்பட்டது.

ஆனால் அத்தகைய வதந்திகளுக்கு ஆதாரம் இருக்க முடியாது என்று அப்போது கூறியிருந்தோம்.

மேற்படி வதந்திகள் விஷமிகளால் கயிறு திரிக்கப்பட்டவை என்பது இப்போது காங்கிரஸ் அக்ராசனர் ஸ்ரீ தாண்டனின் தலைமைப் பிரசங்கத்திலிருந்தே வெளியாகியிருப்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறோம்.

ஸ்ரீ புருஷோத்தமதாஸ் தாண்டனின் பிரசங்கத்தில் விபரீதமான யோசனைகளோ புரட்சிகரமான உபதேசங்களோ எதுவும் இல்லை. அவர் கூறியுள்ள யோசனைகள் யாவும் நமது தலைவர்களின் கருத்தையும் கொள்கையையும் தழுவியதாகவே இருக்கின்றன.

இந்தியா மதத்தை அடிப்படையாகக் கொண்ட ஹிந்து ராஜ்யமாக இருக்கக் கூடாது என்று இந்திய அரசியல் திட்டம் வற்புறுத்தியிருப்பதை ஸ்ரீ தாண்டன் முற்றிலும் ஆதரிக்கிறார்.

"தேச மக்கள் அரசியல் திட்டத்துக்கு முரணாக நடப்பது தற்கொலை செய்து கொள்வதற்கு ஒப்பாகும்" என்று அவர் எச்சரித்திருப்பதை எல்லோரும் கவனிக்க வேண்டும்.

எனினும் ஜனநாயக முறைகளுக்கு முரணின்றி அரசியல் திட்டத்தை மாற்றலாம் என்று ஸ்ரீ தாண்டன் கூறியிருப்பதை, அரசியல் திட்டத்தை எதிர்ப்பவர்கள் கூட ஆதரிப்பார்கள்.

பண்டித நேரு அனுஷ்டித்து வரும் வெளிநாட்டுக் கொள்கையை ஸ்ரீ தாண்டன் முற்றிலும் பாராட்டியிருக்கிறார்.

தேச நலனை உத்தேசித்துச் சென்ற மூன்று வருஷங்களாகச் சர்க்கார் கைக்கொண்டு வரும் முறைகளையும் ஸ்ரீ தாண்டன் வரவேற்றிருக்கிறார்.

எனவே, மேற்படி விஷயங்களில் அவருக்கும் இந்திய சர்க்கார் நிர்வாகத்தை நடத்தும் பண்டித நேரு, சர்தார் பட்டேல் முதலிய தலைவர்களுக்கும் சிறிதும் அபிப்பிராயபேதம் இல்லை.

## சிறந்த யோசனைகள்

முன்பு தியாகத்தின் சின்னமாக விளங்கிய காங்கிரஸ் ஸ்தாபனம் இன்று ஆதிக்க ஆசையின் சின்னமாக மாறிவிட்டதைக் குறித்து அக்ராசனர் ஸ்ரீ தாண்டன் வருந்துகிறார்.

காங்கிரசில் ஊழல்கள் மலிந்துவிட்டன என்றும், அவைகளைக் களைந்து மேற்படி ஸ்தாபனத்தைத் தூய்மைப் படுத்த வேண்டும் என்றும் மற்றத் தலைவர்களும் அடிக்கடி வற்புறுத்தி வருவதால் அவ்விஷயமாகக் காங்கிரஸ் நிர்ணயமான முறைகளை வகுத்து வழி காட்ட முற்படும் என நம்பலாம்.

"பாகிஸ்தான் மீண்டும் இந்தியாவுக்கு விரோதமாகத் துஷ்பிரசாரம் செய்ய ஆரம்பித்திருப்பதால் இந்தியா அவ்விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

"கிழக்கு பாகிஸ்தானிலிருந்தும் மேற்கு பாகிஸ்தானிலிருந்தும் மூவா

பிரத்து ஐந்நூறு கோடி ரூபாய் பெறுமான சொத்துக்களை விட்டு வந்துள்ள அிந்து அகதிகள் அநேகதியாகாமல் பாதுகாப்பதற்குத் தகுந்த முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

"பாரத நாட்டின் பொருளாதார சுபிட்சம் தொழிலாளர், விவசாயிகளின் வாழ்க்கை அந்தஸ்து உயர்வதையே பொறுத்திருப்பதால், அவர்களுடைய வாழ்க்கை அந்தஸ்து அபிவிருத்தியடைவதற்குற்ற முறைகளைச் சர்க்கார் கைக்கொள்ள வேண்டும்.

"கதரும், குடிசைத் தொழில்களும் முன்னேற்றம் அடைவதற்கான திட்டத்தை வகுக்க வேண்டும்."

இவை நான் ஸ்ரீ தாண்டனின் தலைமைப் பிரசங்கத்தில் காணப்படும் முக்கிய விஷயங்கள் ஆகும்.

இவற்றைத் தவிர, சர்க்கார் வீண் செலவுகளைத் தடுக்கத் தீவிரமான முறைகளை எடுத்துக் கொள்ளவேண்டும் என்று அக்ராசனர் கூறியிருப்பதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

இந்திய சர்க்கார், மாகாண சர்க்கார் காரியாலயங்களின் தற்போதைய அதிகச் செலவைக் குறைக்க வேண்டும் என்று அவர் கூறியிருப்பதையும் தலைவர்கள் ஒத்துக் கொள்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

## அமோக ஆதரவு

நாம் இதை எழுதும் தருவாயில் காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டமும் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டமும் முடிவடைந்திருக்கின்றன.

அந்தக் கூட்டங்களின் நடவடிக்கைகள் பாரத மக்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுப்பதாக இருக்கின்றன.

அவற்றிலிருந்தும் நம் தலைவர்களுக்குள் முக்கிய விஷயங்களில் அபிப்பிராய பேதம் இல்லை என்பது தெளிவாகியிருக்கிறது.

இந்தியா — பாகிஸ்தான் ஒப்பந்தம் பற்றியும் இந்திய சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கை பற்றியும் தலைவர்களுக்குள் பலத்த அபிப்பிராயபேதம் இருப்பதாகக் கூறப்பட்டது.

ஆனால் அந்த இரண்டு விஷயங்களைப் பற்றியும் விஷயாலோசனைக் கமிட்டியில் ஏகமனதாகத் தீர்மானங்கள் நிறைவேறியிருக்கின்றன.

பாகிஸ்தான் எவ்வாறு நடந்து கொண்டாலும் இந்தியா தர்ம நியாயத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற காந்திஜியின் கொள்கையையே அக் கமிட்டி ஆதரித்திருக்கிறது.

## ஊழல்கள் ஒழிய வழி

காங்கிரஸ் ஸ்தாபனத்தின் அமைப்பு விதிகளை மாற்ற வேண்டும் என்று கொண்டு வரப்பட்டுள்ள தீர்மானமும் மிக முக்கியமானது.

காங்கிரஸ் அமைப்பு விதிகளை ஒட்டிக் கொண்டு வரப்பட்டுள்ள திருத்தங்களில் நாலு அணா சந்தா செலுத்தி அங்கத்தினராகும் முறையை மறுபடியும் அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்பது ஒன்று.

பஞ்சாயத்துத் தேர்தல் முறை லஞ்ச ஊழல்களுக்கு இடங் கொடுக்கின்றன என்றும், அதைக் காட்டிலும் பழைய நாலணா அங்கத்தினர் முறையே சிறந்தது என்றும் பல முறை நாம் வற்புறுத்தி எழுதியிருக்கிறோம்.

இதே முடிவுக்கு நாஸிக்கில் கூடிய நம் தலைவர்கள் வந்திருப்பதைப் பாராட்டுகிறோம். இந்த மாறுதலைக் காங்கிரஸ் பிரதிநிதிகள் ஏற்பார்கள் என்றும் எதிர்பார்க்கலாம்.

ஆனால் காங்கிரஸில் குடிபுகுந்துள்ள ஊழல்களை ஒழிப்பதற்கு மேற்படி மாறுதல் மட்டும் போதாது.

சட்டசபைகளுக்கு அபேட்சகர் நியமிப்பது போன்ற பார்லிமெண்டரி வேலைகளை ஒரு தனிப்பட்ட கமிட்டியிடம் ஒப்புவிக்க வேண்டும் என்று பண்டித ஜவாஹர்லால் நேரு சொல்லியிருப்பது மிக நல்ல யோசனை.

ஆனால் இதைப் பெரும்பாலான காங்கிரஸ் பிரதிநிதிகள் எளிதில் ஒப்புக் கொண்டு விடுவார்களா?

காங்கிரஸில் பிரவேசித்தால் அங்கிருந்து சட்ட சபைக்குச் செல்லலாம்; சட்ட சபையிலிருந்து மந்திரி பதவியைக் கைப்பற்றலாம் என்ற ஆசையுடனேயே இந்த வருஷக் காங்கிரஸ் பிரதிநிதிகள் பலர் பிரம்மப் பிரயத்தனம் செய்து பிரதிநிதிகளாகியிருக்கிறார்கள். ஊழல் முறைகளினாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டு வந்திருக்கிறார்கள். அப்படிப் பதவி வெறியுடன் வந்திருப்பவர்கள், காங்கிரஸையும் சட்ட சபை வேலைகளையும் பிரித்துவிட இணங்குவார்களா? கடுமையாக எதிர்க்கத்தான் எதிர்ப்பார்கள்.

பண்டித ஜவாஹர்லால் நேரு முதலிய தலைவர்கள் அத்தகையோருடைய எதிர்ப்பைத் தகர்த்து வெற்றி பெற முடியுமா என்று பார்க்க வேண்டும்.

காங்கிரஸ் இழந்த செல்வாக்கை மீண்டும் பெற்றுப் பரிசுத்தம் அடைவது அதைத்தான் பொறுத்திருக்கிறது.

# மறைந்த மாமலை!

“இமயமலை எங்கள் மலை” என்றும் “பொதிகை மலை எங்கள் மலை” என்றும் பெருமையாக நாம் சொல்லிக் கொள்கிறோம். இமயமலைக்குச் சில நாளாக ஏதோ கொஞ்சம் ஆபத்து என்று கேட்டுக் கவலை அடைந்தோம். “நம்முடைய சொந்தப் பொதிகை மலை”க்கு என்னாளும் எந்தவித ஆபத்தும் வராது என்று எண்ணித் தைரியம் பெற்றோம். இந்தப் பூவுலகின் தொடக்கத்திலேயே உறுதியாக உலகத்தின் அச்சைப் போல் அமைந்துள்ளதல்லவா பொதிகை மலை?

நம்முடைய பல மலைவளங்களிலே ஒரு தனிப்பெரும் தமிழ் மலை இருந்து வந்தது. பல்லாவரம் என்று அழைக்கப்படும் பல்லவபுரம் வழியாக ரயிலில் போகிறவர்கள் அங்கே ஒரு சிறு மலையைப் பார்ப்பார்கள். ஆனால் ரயிலில் போகிறவர்களின் கண்களில் புலப்படாமல் இன்னொரு பெரு மலை பல்லவபுரத்தில் இருந்து வந்தது. அதற்கு மறைமலை என்று பெயர். மறைமலையிலும் அது தமிழ் மறைமலை. பொதிகை மலையைப் போல மறைமலையும் என்றும் மறையாத மாமலையாக இருந்து வரும் என்று எண்ணியிருந்தோம். “மக்கள் நூறு ஆண்டு உயிர் வாழ்வது எப்படி?” என்னும் நூலை எழுதிய மறைமலை அடிகள், —சுவாமி வேதாசலம் அவர்கள்— நூறாண்டு வாழ்ந்து, ஆயிரமாயிரம் ஆண்டுகள் நிலைத்திருக்கக் கூடிய தமிழ்ப் பணிகளைப் புரிந்து வருவார் என்று நம்பியிருந்தோம். அசலம் என்றும் மலை என்றும் அந்தப் பெரியாரின் பெயரிலேயே இருந்தபடியால், அவருக்கு என்றும் மறைவில்லை யென்றே எண்ணி இறுமாந்திருந்தோம். பாவி யமன் நம்மிடம் மறக்கருணை காட்டி ஏமாற்றி விட்டான். தமிழ்த்தாய் தன் அரும்பெரும் புதல்வர் ஒருவரை இழந்து தலைவிரி கோலமாய் அழுது புலம்பும்படி செய்து விட்டான்! தமிழ் நாடும் தமிழ் மக்களும் ஏங்கிக் கண்ணீர் விடும்படி செய்து விட்டான்!

பல்லவபுரத்தில் வாழ்ந்து வந்து மறைமலையடிகள் என்னும் தமிழ்ப் பெரியார் செப்டம்பர் 15ஆ யன்று இம்மண்ணுலகை நீத்து விண்ணுலகம் சென்றார்!......

ஆனால் உண்மையில் சென்றாரா? தமிழ் மண்ணில் பிறந்து வளர்ந்த அவர் திருவுடல் இந்தத் தமிழ் மண்ணிலேயே கலந்து விட்டது. ஆனால் அவருடைய ஆன்மா இந்தத் தெய்வத் தமிழ்நாட்டை விட்டு விண்ணுலகத்துக்குத்தான் உண்மையில் சென்றிருக்குமா? அல்லது இந்தப் புண்ணிய பூமியிலேயே சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்குமா? முக்கியமாக, பல்லவபுரத்தில் அவருடைய இல்லத்தில் கோயில் கொண்டிருக்கும் நடராஜ மூர்த்தியின் 'எடுத்த பொற்பாத நிழலை' விட்டுச் செல்ல அவருடைய ஆன்மாவுக்கு விருப்பம் ஏற்பட்டிருக்கக் கூடுமா?

அந்த இல்லத்தின் அலமாரிகளில் சிறப்பாக அட்டை போட்டு அடுக்கடுக்காய் வைத்திருக்கும் அழகிய அறிவுக் களஞ்சியமான ஆயிரக் கணக்கான நூல்களிலேயே அவருடைய ஆன்மா என்றென்றும் உலாவிக் கொண்டிருக்குமா?

* * *

மறைமலையடிகள் இன்றைக்கு எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் நாகைப் பட்டினத்தில் பிறந்தார், இளம்பிராயத்திலேயே தமிழிலும் சைவத்திலும் ஆர்வங் கொண்டார். தமிழை நன்கு கற்றார். சைவ சமயக் கொள்கையில் உள்ளத்தைப் பறிகொடுத்தார். ஆங்கிலத்தில் உள்ள அறிவு நூற்கடலில் இறங்கி நீந்தினார். சில காலம் கிறிஸ்துவக் கலாசாலையில் தமிழாசிரியரா யிருந்து தொண்டு புரிந்தார். ஆனால் அவருடைய உள்ளத்தில் பொங்கித் ததும்பிய தமிழார்வமும், சமயப் பற்றும் கலாசாலை வகுப்பு அறைக்குள் அடங்கி நிற்பனவாக இல்லை.

பின்னர், தமிழ் நாடு முழுவதற்கும் பொதுவான தமிழ்ப் பணியும் சைவப் பணியும் செய்யத் தொடங்கினார்.

நாகநாட்டரசி, கோகிலாம்பாள் கடிதங்கள் முதலிய புதுக் கதைகள் எழுதினார். திருவாசக விரிவுரை, முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை முதலிய பல நூலாராய்ச்சிகள் எழுதினார். தொலைவிலுணர்தல், மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை, பொருந்தும் உணவும் பொருந்தா உணவும் முதலிய வாழ்க்கை நூல்கள் இயற்றினார். “சாகுந்தலம்”, “சிந்தனைக் கட்டுரைகள்” முதலிய மொழி பெயர்ப்பு நூல்கள் ஆக்கினார். “மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்” என்னும் மகத்தான சரித்திர ஆராய்ச்சி நூலை எழுதினார். “சிவஞான போத ஆராய்ச்சி” “சைவ சித்தாந்த ஞானபோதம்” “தமிழ் மதம்” முதலிய சமய ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை இயற்றினார்.

தேனினும் இனிய செந்தமிழ் நடையைக் கைக்கொண்டு சுவாமி வேதாசலம் அவர்கள் முதலில் எழுத ஆரம்பித்தார். "குமுதவல்லி" என்னும் நூலில் இனிமை சொட்டும் சுவாமிகளின் செந்தமிழ் நடையைக் காணலாம். பிற்காலத்தில் மறைமலை அடிகள் தனித்தமிழில் அரிய நடையைக் கையாண்டு நல்ல தமிழறிஞர்களுக்கு விருந்தாகக்கூடிய முறையில் எழுதலுற்றார். அடிகளின் தமிழ் நடை வரவரப் புலமை மிக்க அரிய நடையாக மாறினும் அதன் இனிமையும் அழகும் அதிகரித்தனவே யன்றிக் குறையவில்லை.

சுவாமிகளின் குரல் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. வண்டுகளின் ரீங்காரத்தையொத்து இனிமை மிக்க உச்சஸ்தாயியில் நெடுந்தூரம் தெளிவாகக் கேட்கக் கூடியது. அடிகளின் சொல்லாற்றலோ மிகச் சிறந்தது. தமிழில் பல பொருள்களைப் பற்றியும் புலமை வாய்ந்த சொற்பொழிவுகளை எப்படி நிகழ்த்தவேண்டுமென்பதற்கு மறைத்திரு மறை மலையடிகளார் செவ்விய வழி வகுத்து அளித்தவர்.

அடிகளின் முறையைப் பின்பற்றிப் பலரும் சொற்பொழிவாற்றத் தொடங்கினார்கள். எனினும் அடிகளின் சொல்வன்மையும், குரல் இனிமையும், பொருளாழமும் மற்றவர்களின் உரைகளில் காணக் கூடுவதில்லை.

இளம் பிராயத்திலிருந்து இறைவன் திருவடி அடையும் காலம்வரையில் அடிகள் திங்கள் தோறும் ஐம்பது வெண்பொற்காசு (ரூபாய்)க்குக் குறையாமல் நூல்கள் வாங்கிவந்தார். வாங்கிய நூல்களையெல்லாம் ஆராய்ந்து படித்த பிறகு அழகாக அட்டை போட்டு அலமாரிகளில் அடுக்கிச் சேர்த்து வந்தார். மற்றவர்கள் நில புலன்கள், அணிமணிகள், நகை நட்டுக்கள், பாத்திரம் பண்டங்கள், மற்றும் உடைமைகள் வாங்கிச் சேர்ப்பதில் காட்டும் ஆர்வத்தைக் காட்டிலும் பன்மடங்கு ஆர்வம் காட்டி அடிகள் நல்ல நூல்களைத் திங்கள் தோறும் பணம் கொடுத்து வாங்கிச் சேர்த்து வந்தார். இப்படி வாங்கிச் சேர்த்த புத்தகங்கள் ஏறக்குறைய ஐயாயிரம் (சுமார் முப்பதினாயிரம் ரூபாய் பெறுமானவை) அடிகளின் இல்லத்தில் கண்கவரும் காட்சியாக விளங்குகின்றன.

அடிகள் வாழ்ந்திருந்த இல்லத்தையும் அவர் அதில் சேர்த்த நூல் நிலையத்தையும் தமிழ் மக்கள் முயன்று, உரிய காணிக்கை கொடுத்துப் பெற்று, தமிழகத்தின் பொது உடைமை ஆக்கவேண்டும். அடிகளின் இல்லம் தமிழர்களுக்கு ஒரு புனித யாத்திரைப் பதியாக விளங்க வேண்டும்.

சுவாமிகள் சைவ சமயத்தில் மிகப் பற்றுக் கொண்டவர். ஆனால் சைவத்தின் பெயரால் வெளியாகியிருக்கும் நூல்கள் அவ்வளவையும் புனித வேதமாக அவர் ஒப்புக் கொள்வதில்லை. தமது அறிவாராய்ச்சிக்கு உட்படுத்திப் பொருத்தமானவற்றையே ஒப்புக்கொள்வார். அம்மாதிரியே தமிழில் உள்ள காரணத்தினாலேயே தமிழ் நூல்கள் அனைத்தையும் தலை சிறந்த நூல்கள் என்று ஒப்புக் கொள்வதில்லை. குப்பை, கூளங்கள், இடைச் செருகல்கள் ஆகியவற்றைக் கண்டிப்பாக நிராகரித்து விடுவார்.

அறிவினால் ஆராய்ந்து ஒப்புக் கொள்வது என்று ஏற்பட்டபோது, ஆராய்ச்சி முடிவுகளைப் பற்றிக் கருத்து வேற்றுமை நிகழ்வது இயல்பேயாகும். அடிகள் கண்ட ஆராய்ச்சி முடிவுகள் சிலவற்றை மற்றவர்கள் ஒப்புக்கொள்ள முடியாம லிருப்பதும் இயல்பேயாகும்.

உண்மைக் கவிதையின் இலட்சணத்தை அறிந்து அனுபவிக்கும் துறையில் அடிகள் அதிகமாகக் கவனம் செலுத்தவில்லை. இதனால் கம்பரைப் பற்றிய அவருடைய கருத்துக்களைத் தமிழன்பர்கள் பலர் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

பிறருடன் கலந்து ஒத்துழைத்துப் பணியாற்றும் இயல்பை அடிகள் பெற்றிருக்கவில்லை. தனி நின்று தொண்டு செய்வதிலேயே அவருடைய உள்ளம் சென்றது. சொற்பொழிவு ஆற்ற அழைப்போரிடம் அடிகள் மிகக் கண்டிப்பாக நடந்துகொள்வதுண்டு. இதனால் அவரை அணுகி அழைப்பதற்குத் தமிழன்பர்கள் தயங்கினார்கள் என்பது பலரும் அறிந்ததே.

மேதைகள், மகான்கள், புலவர்கள், பெரியவர்களிடம் தனி இயல்புகள் சில இருக்கத்தான் இருக்கும். இவற்றினாலெல்லாம் அடிகளின் மகத்தான தமிழ்த் தொண்டு எள்ளளவும் குறைந்து விட்டதாகச் சொல்ல முடியாது.

தமிழும், தமிழகமும், சைவ சமயமும் உள்ள வரையில் மறை மலையடிகளின் அரிய தொண்டின் பெருமை குன்றிலிட்ட விளக்காக என்றென்றும் ஒளி வீசிக் கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை.

* * *

மறை மலையடிகளின் அருமைப் புதல்வர்களுக்கும், அவருடைய எண்ணற்ற அன்பர்களுக்கும், ஏடு பரம்பரைக்கும் மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். நேற்று ஒரு மாமலை இருந்த இடத்தில் இன்று ஒரு பெரும் பள்ளம் இருப்பதைப் பார்த்துத் திகைக்கும் தமிழ் மக்களுக்கு என்ன விதத்தில் எம் மொழியில் நாம் ஆறுதல் கூறமுடியும்?



மறைத்திரு மறைமலையடிகளார்

தோற்றம்: 1876-ஜூலை15 · மறைவு: 1950-செப்டம்பர் 15.

# இலங்கையில் ஒரு வாரம்

**கல்கி**

**4**

அறுபது டன் ருஷிய டாங்கிக்கு இணையான ஆற்றல் வாய்ந்த ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் என்பவரைப் பற்றிச் சென்ற கட்டுரையில் குறிப்பிட்டேன் அல்லவா? அப்படிப்பட்ட ஸ்ரீ கே. வி. எஸ். வாஸின் ஆற்றலைக்கூட மீறி விட்ட ஒரு செய்தியை இப்போது கூற விரும்புகிறேன். திருவாளர் விபீஷண ஆழ்வார் அவர்களுக்குச் சில நாளைக்கு முன்பு ஏற்பட்ட அநுபவத்தை உங்களுக்குக் கூறியே தீர வேண்டும். கூறு விட்டால் விபீஷண ஆழ்வாருக்கு மன நிம்மதி ஏற்படாது.

திருவாளர் விபீஷண ஆழ்வார் தனிப் பெரும் சிரஞ்சீவித் தமிழர் என்பது ஆராய்ச்சியாளர் அனைவரும் ஒப்பு முடிந்த செய்தியாகும். இராவணன் எப்போது தமிழனோ, அப்போது அவனுடைய தம்பி விபீஷணனும் தமிழன்தான். இராவணன் தமிழன் என்பது அவனுடைய பத்துத் தலைகளின் மேலும் அடித்துச் சத்தியம் செய்து முடிந்து போன செய்தி. அவன் முப்புரி நூல் அணிந்து யாழ் என்னும் இசைக் கருவியை மீட்டிக் கொண்டு சாம வேதத்தை ஓதிச் சிவபெருமானைப் புகழ்ந்து பாடியதிலிருந்து இராவணன் தமிழன் என்பது உள்ளங்கை தென்னங்கனியாக விளங்கியிருக்கிறது. இராவணனைத் தமிழன் என்றோ, குறைந்த பட்சம் திராவிடன் என்றோ, நாம் ஒப்புக் கொண்டு விடுவதே நலம். இல்லாவிடில், நமது ஆராய்ச்சிக்காரர்கள் கிஷ்கிந்தா புரிவாசிகளுக்குத் தமிழர் பட்டத்தைக் கட்டித் தொலைத்து விடுவார்கள். வாலி இறந்ததும் தாரை புலம்பிய கட்டத்தை எடுத்துக் காட்டி, "ஒரு தனித் தமிழ்க் கைம்பெண்ணைத் தவிர வேறு யார் இப்படி அருமையாகப் புலம்பியிருக்க முடியும்?" என்று ஒரு பெரிய போடாகப் போட்டு நம்மைத் திணற அடித்து விடுவார்கள்! நிற்க.

நமது சிரஞ்சீவி விபீஷண ஆழ்வார் நெடுங்காலம் இலங்கையை ஆண்டு வந்த பிறகு கலியுகம் தொடங்கிற்று. உடனே விபீஷணரின் கவலையும் தொடங்கிற்று. சீதையும் இராமருமாகச் சேர்ந்து நம்மை இப்படி மோசம் செய்து கெடுத்து விட்டார்களே என்று வருந்தினார். இந்த உலகில் என்றென்றைக்கும் இருக்கும்படி சொல்லிவிட்டுப் போனார்களே என்று நினைத்து மிகவும் வருத்தப் பட்டார். அதிலும் ஸ்ரீராமர் என்ன சொன்னார்?

**"இந்த விபீஷணுனு லங்காபுரி ராஜ்யம்!**
**இந்தா! இந்தா! இந்தா!"**

என்று பல்லவி, அநுபல்லவி, சரணங்களாகச் சொல்லிக் கொடுத்துவிட்டுப் போய் விட்டார்! அவருக்கென்ன சொல்வதற்கு? இந்த இலங்காபுரி ராஜ்யத்தை என்றென்றைக்கும் யார் கட்டிக்கொண்டு மாரடிப்பது? ...... இப்படிக் கவலைப் பட்டுக் கொண்டே விபீஷண ஆழ்வார் கலியுக ஆரம்பத்தில் கொழும்புக்கு அருகில் உள்ள ஒரு குன்றின் குகையில் படுத்து அண்ணன் கும்பகர்ணனுடைய தொழிலை மேற்கொண்டார். தமிழர்களின் தொழிலை மேற்கொண்டார் என்று சொல்வதும் தவறாகாது.

ராட்சதர்களுடைய காலக்கணக்கின்படி ஒரு ஜாமநேரம் தூங்கிவிட்டு எழுந்து பார்த்தால், இலங்கையில் எல்லாம் மாறுதலாயிருக்கக் கண்டார். அவர் தூங்கும் சமயத்தில் என்னவெல்லாமோ நடந்து விட்டது. தூங்குகிறவனுடைய தொடையில் கயிறு திரிப்பவர்கள் அல்லவா ஐரோப்பியர்கள்? முதலில், போர்த்துகீயர் வந்தார்கள்; பிறகு டச்சுக்காரர் வந்தார்கள். இந்த இரு சாராரையும் எடுத்து விழுங்கக்கூடிய ஜான்புல் கடைசியாக வந்து சேர்ந்தார். ஜான்புல் பல வருஷ காலம் ஆட்சி செலுத்திவிட்டுத் தனக்குச் சரியான வாரிசு சிங்களவர்கள்தான், அதிலும் கனம் சேனநாயகாதான் என்று தீர்மானித்து, அவருடைய கையில் இலங்கா ராஜ்யத்தைக் கொடுத்து விட்டுப் போனார். எனவே, விபீஷண ஆழ்வார் தூங்கி எழுந்ததும் முழி முழி என்று முழிக்கும்படி நேர்ந்தது. இராஜ்யம் கைவிட்டுப் போனதில் விபீஷணருக்கு ஒரு மாதிரி சந்தோஷந்தான். எனவே "வாழ்க தூக்கம்!" என்று கோஷித்துவிட்டு, இலங்கையில் இனி சாதாரண பிரஜையாக வாழ்வது என்று தீர்மானித்தார். இங்கேதான் அவருக்குச் சங்கடங்கள் பல ஏற்பட்டன.

பிரஜா உரிமைப் பதிவு அதிகாரியிடம் சென்று "என்னை இலங்கையின் பிரஜையாகப் பதிவு செய்யவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். அதிகாரி அவரிடம் ஒரு கத்தை நமூனாக்களைக் கொடுத்துப் பூர்த்தி செய்து தரச் சொன்னார். விபீஷண ஆழ்வார் அந்த நமூனாக்களைப் பார்த்து விட்டுத் திருதிருவென்று விழித்தார்.

"எழுதப் படிக்கத் தெரியாதா?" என்று அதிகாரி கேட்டார்.

"தெரியும்; ஆனால் நான் பள்ளிக்கூடத்தில் படித்த காலத்தில் எழுத்துக்கள் வேறு விதமாயிருந்தன. ஆகையால் அதிகாரி அவர்களே கருணைக்கூர்ந்து பூர்த்தி செய்துகொள்ள வேண்டும்!"

அதிகாரி கருணை கூர்ந்து விபீஷணரைக் கேள்வி கேட்க ஆரம்பித்தார்.

"உம்முடைய பெயர் என்ன?"

"விபீஷணர்."

"தகப்பனார் பெயர்?"

"புலஸ்தியர்."

"பாட்டனார் பெயர்!"

"பிரம்மா."

"தகப்பனாரும் பாட்டனாரும் இலங்கையில் பிறந்து இலங்கையில் வசித்தவர்கள்தானா?"

"தகப்பனார் புலஸ்தியர் இலங்கையில் பிறந்து வளர்ந்தவர். அவருடைய பெயரால் பொலன்னருவா என்ற நகரமும் இருக்கிறது."

"பாட்டனார் விஷயம் என்ன?"

"பாட்டனார் திருப்பாற்கடலில் மகாவிஷ்ணுவின் நாபி கமலத்தில் பிறந்து பிரம்மலோகத்தில் வசித்திருப்பவர்!..."

"அப்போதே நினைத்தேன்!" என்றார் அதிகாரி. விபீஷணரை ஏற இறங்கப் பார்த்து, "அப்படியானால் உம் பாட்டனார் இலங்கைவாசி இல்லை!" என்றார்.

"இல்லை. ஆனால் அண்ணன் இராவணனுக்குப் பஞ்சாங்கம் பார்த்துச் சொல்லச் சிலசமயம் இங்கே வந்ததுண்டு."

"சரி! நீர் இலங்கையில் வம்சாவளிப் பிரஜை உரிமை பெறமுடியாது."

"அது இல்லாவிட்டால், வேறு எந்தப் பிரஜா உரிமை கொடுத்தாலும் சரிதான்."

"நீர் இலங்கையில் பிறந்ததற்கும் இருந்ததற்கும் சாட்சி உண்டா?"

விபீஷணர் சிறிது யோசித்து விட்டு "பிறந்ததற்குச் சாட்சி கிடையாது. இருந்ததற்கு அனுமார் என்று ஒருவர் சாட்சி சொல்லக்கூடும். ஆனால் அவரைத் தேடிப்பிடிப்பது கஷ்டம்!" என்றார்.

"அந்த மாதிரி வாய்மூல சாட்சி உபயோகமில்லை. எழுத்து மூலமான ஆதாரம் வேண்டும்."

இதைக் கேட்ட விபீஷணர் சுருசுருப்புடன் சென்று, வால்மீகி ராமாயணம், கம்ப ராமாயணம், துளசி தாஸ் ராமாயணம், ராம நாடகக் கீர்த்தனை ஆகிய புத்தகங்களைக் கஷ்டப்பட்டுத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தார்.

அதிகாரி அவ்வளவு புத்தகங்களையும் புரட்டிப் பார்த்து விட்டு, "இதெல்லாம் பழைய கதைகள். உபயோகமில்லை. திரேதா யுகத்துச் செய்தி இங்கே யாருக்கு வேணும்? 1938-ம் வருஷத்திலிருந்து 1945-ம் வருஷம் வரையில் நீர் எங்கே இருந்தீர்?" என்று கேட்டார்.

"இலங்கையில் தான் இருந்தேன்."

"இதற்கு ஏதாவது தஸ்தவேஜு மூலமான சாட்சியம் இருக்கிறதா?"

"எந்த மாதிரி?"

"இந்தியாவிலிருந்து ஏதாவது கடிதம், ரிஜிஸ்தர், மணியார்டர் மேற்படி ஆறு வருஷங்களில் வந்ததுண்டா? வந்த கடிதங்களின் உறைகளைப் பத்திரப் படுத்தி வைத்திருக்கிறீரா?"

"இல்லை."

"அப்படியானால், உமக்குப் பிரஜா உரிமையும் இல்லை."

இதைக் கேட்ட விபீஷணர் மூர்ச்சையடைந்து விழுந்து எழுந்த பிறகு, "இனி இலங்கையில் இருப்பதா? வைகுண்டத்துக்குப் போய் முறையிடுவதா?" என்ற கவலையில் ஆழ்ந்திருக்கிறாராம்.

இதைக் கேள்விப் பட்டதும் விபீஷணரைப் பற்றிய கவலையில் நான் ஆழ்ந்தேன். முருகனைப் பற்றிய கவலை தோன்றிய பிறகுதான் அவரை மறக்க முடிந்தது.

ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறீர்கள் அல்லவா? ஒரு மனிதருக்கு இரட்டைக்



ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் (ருஷ்ய டாங்கி)
"வீரகேசரி" செய்தி ஆசிரியர்.



ஸ்ரீ கே. வி. எஸ். சுந்தரம்

குழந்தைகள் பிறந்தன. இதையறிந்த சிநேகிதர் ஒருவர் வந்து தமது அநுதாபத்தைத் தெரிவித்தார். "உமக்குக் கூச்சல் என்றால் பிடியாதே! இரண்டு குழந்தைகளும் சேர்ந்து கூச்சல் போட்டால் பெருந் தொல்லையாயிருக்குமே?" என்று கேட்டார். "அது தான் இல்லை! ஒற்றைக் குழந்தையாக இருந்தால் தான் கூச்சல் தொந்தரவு. இரண்டு குழந்தைகள் சேர்ந்து கூச்சலிடும் போது ஒன்றின் கூச்சல் இன்னொன்றின் கூச்சலில் மறைந்து விடும் அல்லவா?" என்று சொன்னார் இரட்டைக் குழந்தையின் புத்திசாலித் தகப்பனார்.

இதுபோலவே முருகனைப் பற்றி எனக்கு ஏற்பட்ட கவலையினால் விபீஷணனின் கவலையை நான் மறக்கலாயிற்று.

* * *

ரத்மலானை விமான நிலையத்தில் நாங்கள் இறங்கியதும் அங்கே கூடியிருந்த நண்பர்களின் முகங்களுக்கு மத்தியில் ஒரு முகம் பளிச்சென்று மலர்ச்சியுடன் காட்சி தந்தது. யாரோ தெரிந்தவராய்த்தான் இருக்குமென்று அவரைப் பார்த்துப் புன்னகை செய்து வைத்தேன். உடனே அவரும் புன்னகை செய்து, "நீங்கள் கோவிலுக்கு வரவேண்டும். தெரியுமா? கோவிலுக்குக் கட்டாயம் வரவேண்டும்! இல்லாவிட்டால் உங்களைத் திரும்பிப் போக விடமாட்டோம்!" என்றார்.

டாக்டர் நல்லநாதனின் இல்லம் சேர்ந்ததும் மறுபடியும் அதே நண்பரைப் பார்த்தேன். "நீங்கள் கோவிலுக்கு வர வேண்டும். எங்கள் கூட்டுப் பிரார்த்தனையில் கலந்து கொள்ள வேண்டும்! இல்லாவிட்டால் விடமாட்டேன்!" என்றார். இந்த நண்பரின் பெயர் கே. வி. எஸ். சுந்தரம் என்றும், கொழும்பில் பிரபல வர்த்தகர் என்றும் அறிந்தேன்.

"கோவிலுக்கு வரவேண்டும்; கூட்டுப் பிரார்த்தனையில் கலந்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் விடமாட்டேன்!" என்று அவர் மேலும் பத்துப் பன்னிரண்டு தடவை சொன்ன பிறகு, எனக்குக் கோபம் வந்து விட்டது.

"எந்தக் கோவிலுக்கு?" என்று கேட்டேன்.

"முருகன் கோவிலுக்கு" என்றார் ஸ்ரீ கே. வி. எஸ். சுந்தரம்.

"எந்த முருகன்?" என்றேன்.

சிறிது திகைத்துவிட்டு, "ஒரே முருகன் தான். அவர்தான்!" என்றார்.

"ஒரே முருகன்தான் என்றால், அவரை நான் தமிழ் நாட்டில் பார்த்தேனே? இங்கே எப்போது வந்தார்?"

"முன்னமே வந்து விட்டார். வெகு காலமாக இங்கேதான் இருக்கிறார்."

"இது என்ன ஐயா, வேடிக்கை? வெகு காலமாக இங்கே இருக்கிறார் என்றால், இலங்கையின் பிரஜையாகப் பதிவு செய்து கொண்டிருக்கிறாரா?"

ஸ்ரீ சுந்தரம் விழித்துப் போனார். அவருடைய விழிப்புக்கு எனக்குக் காரணம் தெரியாமலில்லை. முருகப் பெருமான் இப்போதைய இலங்கைப் பிரஜா உரிமை விதிகளின் கீழ் பதிவு செய்து கொள்ள முடியாது. ஏனெனில், அவர் வள்ளி, தேவயானை ஆகிய இரண்டு பத்தினிகளையும் இரண்டு கண்களாக வைத்துக் கொண்டிருப்பவர் அல்லவா?

ஆகவே, முருகன் இலங்கையின் பிரஜை ஆக முடியாது. இரண்டு மனைவிகள் உள்ளவர் யாருமே இலங்கைப் பிரஜையாக முடியாது. ஒருத்தியை மனைவி என்றும், இன்னொருத்தியை வேறு ஏதாவது பெயர் சொல்லியும் அழைத்தால் புகழ்பெற்ற இலங்கையின் பிரஜையாகலாம்! இருவரையும் மனைவிமார் என்று அழைத்தால் அது சாத்தியமில்லை.

இருதார மணத்தைப் பற்றி என்னுடைய அபிப்பிராயம் எதிரிடையானது தான். ஒரு தார மணங்கூட அவ்வளவு புத்திசாலித்தனமானது என்று நான் சொல்ல முடியாது. ஒரு தடவை, ஏதோ

போனால் போகிறது என்று மன்னித்து விடலாம். இரண்டாம் தடவையும் ஒரு தவறைச் செய்தால் அதை யார்தான் சரி என்று ஒத்துக் கொள்ள முடியும்?

ஆகவே, இருதார மணத்தை நான் அவ்வளவாக விரும்புகிறவன் அல்ல. ஆனாலும், இந்தக் காரணத்தைக் கொண்டு அநேக ஆயிரம் இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை இல்லையென்று அடித்து விடுவதாயிருந்தால், அதை எப்படி நியாயம் என்று ஒத்துக் கொள்ள முடியும்?

இலங்கையில் ஏற்பட்டிருக்கும் இருதாரப் பிரச்னையின் இரகசியம் இதுதான். தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்யப்போன இந்தியத் தொழிலாளிகளில் பலர் ஒரு மனைவிக்கு மேலே கலியாணம் செய்து கொண்டிருக்கிறார்களாம். முன்னேயெல்லாம் தோட்ட முதலாளிகளுக்கு இது சௌகரியமாயிருந்தது. தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்வதற்குப் பெண்கள் அதிகம் தேவை. அவர்களுக்குச் சம்பளம் குறைவாகக் கொடுத்தால் போதும். சுதந்திரமாக ஸ்திரீகளைக் கொண்டு வந்து தோட்டங்களில் விடுவதற்கில்லை. அதனால் பல சிக்கல்கள் ஏற்படும். ஆகையால் தோட்டத் தொழிலாளிகள் இரண்டு அல்லது மூன்று மனைவியர்களை மணந்து கொள்வதை முதலாளிகள் விரும்பினார்கள். அதிக கூலி வருமானம் வரும் என்ற காரணத்தினால் பல தொழிலாளிகள் அவ்விதம் இருதார மணம் செய்து கொண்டார்கள்.

இப்போது சிங்கள சர்க்கார் கொண்டு வந்திருக்கும் சட்டத்தின்படி மேற்படி வழக்கம் பிரஜா உரிமைக்குப் பெரும் இடையூறாக ஏற்பட்டிருக்கிறது. "பிரஜா உரிமையைக் கைவிடுவதா? அல்லது கட்டிய மனைவியைக் கைவிடுவதா?" என்ற தர்ம சங்கடமான நிலைமை பல ஏழைத் தொழிலாளிகளுக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. பாவம்! இரண்டு பெண்டாட்டிக்காரர்களுக்கு உள்ள கஷ்டங்கள் போதாவென்று இந்த நெருக்கடி வேறு அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

இந்த நெருக்கடியான பிரச்னை நமது முருகப் பெருமானுக்கும் ஏற்படத்தானே செய்யும் என்ற கவலை எனக்கு ஏற்பட்டது. எனவே, நண்பர் சுந்தரம் அவர்களிடம் "முருகனை இந்தியாவுக்கே திரும்ப அனுப்பி விடுவதுதானே?" என்று ஆனமட்டும் சொல்லிப் பார்த்தேன். நண்பர் சுந்தரம் "அது முடியவே முடியாது" என்று சொல்லி விட்டார்.

பிறகு அவருடைய வற்புறுத்தலுக்கு இணங்க, ஜிந்துப்பட்டி ஸ்ரீ சுப்பிரமண்ய ஸ்வாமி கோவிலுக்குப் போய்ப் பார்த்தபோது, நண்பர் சுந்தரம் அநுமதி கொடுத்தாலும் முருகன் அங்கிருந்து இலேசில் கிளம்பிவிட மாட்டார் என்று நான் முடிவு செய்ய வேண்டியதாயிற்று.

கோவில் என்றால், இதுவல்லவா கோவில்? பக்தி என்றால் இதுவல்லவா பக்தி? பிரார்த்தனை என்றால், இதுவல்லவா பிரார்த்தனை?

கோயில் பிராகாரத்தில் அமைந்திருந்த விஸ்தாரமான மண்டபத்தில் அலங்கரித்த அழகிய ஊஞ்சல் மஞ்சத்தில் வள்ளி, தேவயானை சமேதராக முருகன் வீற்றிருந்தார். ஊஞ்சல் இலேசாக ஆடிக் கொண்டிருந்தது. முருகன் பக்தர்களுக்கு அருள் புரிய நெருங்கி நெருங்கி வருவது போலத் தோன்றியது.

ஸ்ரீ சுந்தரம் அவர்களும் அவருடைய சகோதரரும் பட்டை பட்டையாக வெள்ளைத் திருநீறு அணிந்து, பலப் பல ருத்திராட்ச வடங்களைத் தரித்து, சிவபக்தியே வடிவங் கொண்டவர்களாக விளங்கினார்கள். இவர்களைப் போல் இன்னும் நூற்றுக் கணக்கான அடியார்கள் அச்சபையில் சேர்ந்திருந்தார்கள். திருச்செந்தூரிலிருந்து வந்திருந்த ஒரு பக்தர் இனிய குரலில் திருப்புகழ் பாடினார். அனைவரும் ஒரு முகமாக மனங் குவிந்திருந்து பிரார்த்தனை நடத்தினார்கள். பக்தி வெள்ளம்



வித்வான் ஸ்ரீ வி. எம். கே. கனகசுந்தரம்
கொழும்பு தமிழ்ச் சங்கக் காரியதரிசி



ஆசிரியர் ஸ்ரீ ஹாண்டி பேரின்பநாயகம்

பெருக்கெடுத்து ஓடியது. அப்படிப்பட்ட இடத்திலிருந்து புறப்படுவதற்கு முருகன் இலேசில் இணங்கி விடுவாரா?

* * *

கொழும்பில் நாங்கள் தங்கிய சில தினங்களில் இன்னொரு ஆலயத்துக்குச் செல்லும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது. கொழும்புக்குப் பக்கத்தில் கப்பித்தாவத்தை என்னும் விசித்திரப் பெயர் உள்ள ஊரில் ஸ்ரீ கைலாசநாதர் கோயில் என்னும் பழமையான ஆலயம் இருக்கிறது. இது வெகு காலமாகச் சிதிலமாகக் கிடந்தது. ஸ்ரீ வி. எஸ். சாமிநாத செட்டியார் என்னும் வணிக வைசியர் அந்தப் பழைய ஆலயத்தைப் புதுப்பிக்கும் திருப்பணியில் ஈடுபட்டார். பதின்மூன்று ஆண்டுகள் முயன்று, தம் குலத்துப் பிரமுகர்கள் பலருடைய உதவியுடன் திருப்பணியை முடித்துக் கும்பாபிஷேகமும் நடத்தினர். கும்பாபிஷேகம் நடந்த மூன்று மாதத்திற்கெல்லாம் இறைவன் அந்தப் பெரியாரைக் கைலாசத்துக்கே அழைத்துக் கொண்டார்.

இந்தப் புனிதமான ஆலயத்தை எங்களுக்குத் தரிசனம் செய்து வைத்தவர் ஸ்ரீ பி. வி. கதிர்வேல் செட்டியார் என்னும் மற்றொரு பிரபல இந்திய வர்த்தகர். இவரும் சிறந்த பக்திமான். நம் திருப்புகழ் மணி கிருஷ்ணசாமி ஐயரின் குழாத்தைச் சேர்ந்தவர். ஸ்ரீ கைலாசநாதர் கோவிலில் இவர் சிரத்தை கொண்டிருப்பதோடு கூட இன்னும் பல பொது நலத் தொண்டுகளிலும் ஈடுபட்டிருக்கிறார். "இந்தியர்கள் இலங்கையில் பணம் சம்பாதித்து இந்தியாவுக்குக் கொண்டு போவதில் முனைந்திருக்கிறார்களே தவிர இலங்கையில் நிரந்தரமான தர்மம் எதுவும் செய்வதில்லை" என்ற புகார் இவரால் ஓரளவு நீங்கி வருகிறது என்று நண்பர்கள் சொன்னார்கள்.

தமிழ்ச் சங்க ஆண்டு விழாவின் போது பெற்ற அநுபவங்களிலிருந்தும் இந்த இரண்டு ஆலயங்களில் கண்ட காட்சிகளிலிருந்தும் ஸ்ரீ தூரனுக்கும் எனக்கும் ஒரு நிச்சயம் ஏற்பட்டது. தமிழ் நாட்டில் இப்போது சிலர் "தமிழை ஒழித்து விடுவோம்!" என்றும், இன்னும் சிலர் "கடவுளைத் தொலைத்து விடுவோம்!" என்றும் பயமுறுத்தி வருகிறார்கள் அல்லவா? அப்படியே இவர்களுடைய கட்சி பிரமாதமான வலிமை பெற்று வெற்றியடைந்தாலும், நம்முடைய தமிழும் தமிழரின் கடவுளும் கட்டாயம் தப்பிப் பிழைத்துக் கொள்வார்கள். தமிழையும் தமிழரின் சமயத்தையும் தமிழ் நாட்டிலுள்ளவர்கள் கைவிட்டாலும் கூட இலங்கையிலுள்ள தமிழர்கள் போற்றிக் காப்பாற்றி வருவார்கள். இதில் என்னளவும் சந்தேகமில்லை.

இத்தகைய உறுதி பெற்றுக் கொண்டு, கொழும்பு நண்பர்களிடம் விடையும் பெற்றுக் கொண்டு, ஸ்ரீ தூரனும் நானும் யாழ்ப்பாணத்துக்குக் கிளம்பினோம்.

## 5

யாழ்ப்பாணத்தில் இடறி விழுந்தால்.......இது என்ன? இடறி விழுவதற்கு யாழ்ப்பாணத்துக்குப் போக வேண்டுமா? உள்ளூரிலேயே இடறி விழக்கூடாதா?...விழலாம், ஐயா, விழலாம்! உள்ளூரிலேயே நன்றாக இடறி விழலாம். ஆனால் உள்ளூரிலே இடறி விழுந்தால் எங்கேயாவது நடுச்சாலையில் விழுந்து தொலைப்போம். அல்லது ஒரு டிராம் வண்டி அல்லது மோட்டார் வண்டி அல்லது ஒரு ரயில் வண்டி மீது விழுந்து தொலைப்போம். வண்டிகள் வீணில் சேதம் அடையும். போக்குவரத்து தடைப்படும்.

ஆனால் யாழ்ப்பாணத்தில் இடறி விழுந்தால் ஒரு உபாத்தியாயர் அல்லது ஒரு கல்விமான் மீதுதான் விழுவோம். அப்படி விழுவதினால் அவர்களுக்குச் சேதம் ஏதேனும் ஏற்பட்டால் யாரும் அதைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள். ஆயிரம், பதினாயிரம் பேரில் ஒருவர் இருவர் குறைந்து போனால் என்ன பிரமாத நஷ்டம்? ஒரு வேளை நாம் இடறி விழும்போது பக்கத்

தில் ஒரு ஆசிரியர் அல்லது கல்விமான் இல்லாமற் போனாலும், நாம் தரையில் விழுந்து விட முடியாது. யாழ்ப்பாண நகரத்துக்குள் ஒரு சாலையிலோ; ஒரு வீதியிலோ தரையில் விழுந்து வைக்கலாம் என்ற ஆசை யாருக்கும் வேண்டியதில்லை. ஏனெனில் அப்படி நீங்கள் இடறிக் கீழே விழப் போகிறீர்கள் என்பதற்கு அறிகுறி காணப்பட்டவுடன் ஒரு சுகாதார அதிகாரி ஓட்டமாய் ஓடி வந்து நீங்கள் தரையில் விழாமல் தாங்கி எடுத்துக் கொண்டு போய் உங்களைக் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு மறுகாரியம் பார்ப்பார்!

குப்பைத் தொட்டியில் போடும் உரிமை பத்திரிகாசிரியர்களுக்குத்தான் உண்டு என்று அதுகாறும் எண்ணியிருந்தேன். யாழ்ப்பாணத்துச் சுகாதார அதிகாரிகளுக்கும் அந்த உரிமை உண்டு என்று தெரிந்தது. பத்திரிகாசிரியர்கள் கதை கட்டுரைகளை மட்டுந்தான் குப்பைத் தொட்டியில் போடுவார்கள். யாழ்ப்பாணத்துச் சுகாதார அதிகாரிகளோ அந்தக் கதை,- கட்டுரைகளை எழுதியவர்களைக் கூடக் குப்பைத் தொட்டியில் தூக்கிப் போட்டு விடுவார்கள்!

ஸ்ரீ கே. ஆள்வாப் பிள்ளை
இலங்கை உணவு இலாகா தலைவர்

இது எப்படி எனக்குத் தெரிந்தது என்றால், யாழ்ப்பாணத்தில் நானும் ஸ்ரீ தாரனும் தங்கியிருந்த இரண்டு தினங்களில் ஒரு நாள் மாலை போலீஸ் அதிகாரியைப் போல் உடுப்புத் தரித்த ஒருவர் வந்தார். "ஐயா! இந்த ஊர் ஆலயத்தில் திருவிழா நடைபெறுகிறது, நீங்கள் ஐந்து நிமிடம் வந்து சமுகம் தர வேண்டும்!" என்றார். என் காதுகளை நான் நம்பவில்லை. எப்போதுமே என் காதுகளின் விஷயத்தில் எனக்குக் கொஞ்சம் அவநம்பிக்கைதான். அவரை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "எங்கே வரவேண்டும் என்கிறீர்கள்?" என்றேன். "ஆலயத்துக்கு வர வேண்டும். விழா நடக்கிறது!" என்றார்.

ஒருவேளை யாழ்ப்பாணத்தில் ஆலயம் என்பதற்குப் போலீஸ் ஸ்டேஷன் அல்லது சிறைச்சாலை என்ற பொருள் இருக்குமோ என்று யோசித்தேன். எல்லாவற்றுக்கும் போய்ப் பார்த்து விடலாம் என்று துணிந்து புறப்பட்டேன். கோயிலைச் சுற்றியுள்ள ராஜவீதிகளில் ஒன்றுக்கு வந்து சேர்ந்தோம். வண்டியிலிருந்து இறங்கி நடக்கத் தொடங்கினோம். என் சட்டைப் பையிலிருந்து கைக்குட்டையை எடுத்தேன்; அப்போது ஒரு காகிதம் கீழே விழுந்தது. உடனே அந்தப் போலீஸ் உடுப்புத் தரித்த சுகாதார உத்தியோகஸ்தர் அந்தக் காகிதத்தைப் பொறுக்கி எடுத்து வீதி ஓரத்தில் வைத்திருந்த குப்பைத் தொட்டியில் கொண்டு போய்ப் போட்டார். பிறகு நான் வேண்டுமென்றே கைக்குட்டையைக் கீழே போட்டேன். அதையும் பொறுக்கிக் கொண்டு போய்த் தொட்டியில் போட்டார்.

"பெரியசாமி! ஜாக்கிரதை! தப்பித் தவறி தரையில் விழுந்து விடவேண்டாம். விழுந்தால் நம்மையும் கொண்டு போய்த் தொட்டியில் போட்டுவிடப் போகிறார்!" என்று எச்சரித்தேன்.

"பார்த்தீர்களா? நம் ஊரில் கோயில் உற்சவம் என்றால் சுற்றுப் பக்கங்களில் எவ்வளவு குப்பையும் கூளமுமாயிருக்கும்? இந்த வீதிகளில் ஒரு குப்பை கூளங்கூட இல்லையே?" என்றார் தாரன்.

"இந்த ஊரில் குப்பை கூளத்துக்கு மெத்த கிராக்கி போல் தோன்றுகிறது. கறுப்பு மார்க்கெட்காரர்கள் அமுக்கி விட்டார்களோ, என்னமோ?" என்றேன்.

"இல்லை ஐயா! திருவிழாவை முன்னிட்டு வீதிகளைச் சுத்தம் செய்து வைத்திருக்கிறோம்!" என்றார் அதிகாரி.

"ஓகோ! அப்படியா?"

"வீதிகள் தூய்மையாக இருப்பது உங்களுக்குப் பிடித்திருக்கிறதல்லவா?"

"பிடித்திருக்கிறது! ஆனாலும் ஒரு குறை. வீதிகளையெல்லாம் சுத்தம் செய்து வைத்திருந்தால் மட்டும் போதுமா?

ஏன் தெருவிலும் ரத்தினக் கம்பளம் விரித்திருக்கக் கூடாது?'' என்றேன்.

"ரத்தினக் கம்பளம் விரித்தால் தரை அழுக்காகிவிடும், ஐயா!'' என்றார் அந்த சுகாதார அதிகாரி.

நாலு வீதிகளையும் சுற்றிப் பார்த்த பிறகு ஆலயத்துக்குள் செல்ல நண்பர் பெரியசாமித் தூரன் விரும்பினார். நான் கண்டிப்பாக மறுத்து விட்டேன்.

"நித்தியமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்......''

என்று தாயுமானவர் பாடியிருக்கிறார். கடவுள் சுத்த வடிவமாக இருக்கிறார் எனில், அந்த நாலு வீதிகளிலும் அவர் கட்டாயம் இருக்கத்தான் வேண்டும். கடவுளைத் தரிசிக்க ஆலயத்துக்குள் போக வேண்டிய அவசியம் என்ன?......

மேலும், ஒரு கட்டுரை எழுதும்போது எங்கேயோ ஆரம்பித்து எங்கேயோ போவது உசிதம் அல்ல. ஆகையால் இடறி விழுகிற கட்டத்துக்கே திரும்பி வந்து சேரவேண்டியதுதான்.

யாழ்ப்பாணத்தில் எங்கே பார்த்தாலும், இடறி விழும் இடமெல்லாம், ஆசிரியர்கள் அல்லது கல்விமான்களாகவே இருப்பார்கள். நகர மண்டபத்தில் நடந்த கூட்டத்தில் ஒரு பிரமுகரைக் குறிப்பிட்டு, "இவர் இன்னார்...பெரிய கல்விமான் (ஸ்காலர்)'' என்று ஆசிரியர் பேரின்ப நாயகம் அறிமுகம் செய்வித்தார்.

"கல்விமான்கள் இருக்கட்டும், ஐயா! கல்விமான்களைத்தான் இந்த ஊரில் எங்கே திரும்பினாலும் பார்க்கிறோமே! கல்விமான் இல்லாத ஒருவரைக் காட்டுங்கள்!'' என்று கேட்டேன்.



"அண்ணே! தூத்துக்குடி வண்டியிலே ஒரு ஆள் சாத்துக்குடி கேட்டாரு. போ, சீக்கிரம்.''

அந்த நண்பரால் காட்ட முடியவில்லை. என் ஆகாசக் கோட்டை தகர்ந்தது. கல்விமான் அல்லாத ஒருவரைக் கண்டு பிடித்தால், அவரைக் கொண்டு "கல்விமான் அல்லாதார் சங்கம்'' ஒன்று ஏற்படுத்தி, அவர்களுக்குத் தனிப்பட்ட உரிமைகளும் சட்டசபை ஸ்தானங்களும் உத்தியோகங்களும் வேண்டுமென ஓர் இயக்கத்தையே ஆரம்பித்து வைக்கலாம் என்று எண்ணியிருந்தேன். அது சாத்தியமாகவில்லை!

மறுபடியும் பள்ளிக்கூட ஆசிரியர்களிடம் வருவோம். யாழ்ப்பாணத்தில் பள்ளிக்கூட ஆசிரியர்களும் அதிகம்; பள்ளிக்கூடங்களும் ஏராளம்.

"யாழ்ப்பாணத்தின் மாபெருங் கைத்தொழில் என்ன?'' என்று கொழும்பில் உள்ளவர்கள் ஒரு கேள்வி போட்டுக் கொள்வார்களாம். "பள்ளிக்கூடந்தான்!'' என்று பதிலும் சொல்வார்களாம். இப்படி அவர்கள் சொல்வதற்குத் தகுந்தாற்போல் ஆசிரியர் ஸ்ரீ ஹாண்டி பேரின்ப நாயகம் கையில் ஒரு தடி வைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தேன்.

பத்து வருஷத்துக்கு முன்னால் ஸ்ரீ பேரின்பநாயகத்தை நான் பார்த்த போது அவர் கையில் பிரம்பு இல்லை; இப்போது இருந்தது. அப்போது அவர் பள்ளிக்கூட ஆசிரியர் அல்ல. ஆனால் இப்போது ஜாப்னா 'காலேஜ்' தலைமை ஆசிரியர்.

"ஆகவே இந்தக் கைத் தடியினால் உங்கள் பள்ளிக்கூடத்தில் தொழில் நடத்துவீர்களோ? பிள்ளைகளை அடித்து வெளுத்து விடுவீர்களோ?'' என்றேன்.

"அதெல்லாம் இங்கே நாங்கள் பிள்ளைகளை அடிக்கிற வழக்கம் இல்லை!'' என்றார் ஸ்ரீ பேரின்ப நாயகம்.

"அப்படியானால் பெற்றோர்களைத்தான் அடிப்பீர்களோ?'' என்று பீதியுடன் கேட்டேன்.

"பெற்றோர்களையும் நாங்கள் அடிக்க மாட்டோம்......''

"பின்னே, உங்கள் கையில் தடி இருப்பது எதற்காக?''

"காலில் கொஞ்சம் நீர் கட்டிக் கொண்டிருக்கிறது. ஆகையால் சிறிது சாய்ந்து நடக்கவேண்டியிருக்கிறது. நடப்பதற்கு உதவியாக இந்தத் தடியை வைத்துக் கொண்டிருக்கிறேன்.''

"நீங்கள் சாய்ந்து நடப்பதும் ஒரு அழகாய்த்தான் இருக்கிறது!'' என்றேன்.

அந்தக் குறிப்பை அறிந்து ஸ்ரீ ஹாண்டி பேரின்ப நாயகம் நானும் ஸ்ரீ பெரியசாமித் தூரனும் ஊருக்குப் புறப்படுகையில் தலைக்கு ஒரு அழகிய கைத் தடி பரிசாகக் கொடுத்தார். (தொடரும்)



ஒட்டைச் சிவிங்கியும் கோழியும் தண்ணீர் குடிக்கும் விதத்தைப் பார்த்தீர்களா? ஒட்டைச் சிவிங்கி குனிந்து குடிக்கிறது கோழி அண்ணாந்து குடிக்கிறது!
எதன் கால்கள்? எதன் வால்கள்? கண்டு பிடியுங்கள் பார்க்கலாம்!




"அந்தப் புத்துக்குப் புதிதாகக் குடிவந்திருக்கும் பாம்பு நல்ல பாம்பு என்று சொன்னாயே! பழகிப் பார்த்தால் அல்லவா தெரியும் அது ஒரே விஷம் என்று!"




ஆறுக்குப் பக்கத்தில் ஒரு 'சைபர்' போட்டால் என்ன ஆகும்?
"ஒரு 'பஸ்' ஆகும், ஸார்!"




சில சமயம் காப்பி மேல் துணியில் கொட்டி விடுகிறதில்லவா? அந்தக் கறையைப் போக்குவதற்கு உடனே பாலில் விட்டுக் கசக்கினால் கறை மறைந்து விடும்.
எதற்கும் அதிர்ஷ்டம் வேண்டாமா? இந்தப் பறவை தான் பிடித்த மீனை இன்னொரு பறவையிடம் பறி கொடுத்துவிட்டுக் கஷ்டப்படுவதைப் பாருங்கள்!
பாப்பா மலர்
கல்கி
சாமா

# எதிர்பாருங்கள்

# ஜெமினியின்
# ஔவையார்

பாமரருக்கும் பண்டிதருக்கும்
வழிகாட்டியாயிருந்து உபதேசித்த
கவியரசியின் கதை...

**கே.பி.சுந்தராம்பாள்**

நடித்தது





# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி



## 7-புஜங்காசனம்

விரிப்பில் குப்புறப் படுக்கவும். இரண்டு குதி கால்களும் சேர்ந்திருக்க வேண்டும். இரண்டு உள்ளங்கைகளும் புஜங்களுக்குக் கீழ் விரிப்பில் படியும் படி விரல்களை நீட்டிச் சேர்த்து வைக்கவும். முகவாய்க் கட்டை விரிப்பில் ஒட்டி இருக்க வேண்டும். இப்பொழுது இந்த ஆசனம் செய்யத் தயாராய் இருக்கிறீர்கள். பிறகு சுவாசத்தை மெதுவாய் விட்டுக் கொண்டே, கையை ஊன்றியவாறு தலையைத் தூக்கிப் பின்னுக்கு எவ்வளவு வளைத்துப் பார்க்க முடியுமோ அவ்வளவு வளைத்துப் பார்க்கவும். கைகள் சற்று வளைந்திருக்க வேண்டும். அடி வயிறும் தொப்புளும் விரிப்பில் ஒட்டியிருக்க வேண்டும். வயிற்றுக்குக் கீழ்ப் பாகத்தை விறைப்பாய் வைத்துக் கொள்ளாமல், லாகவமாய் விட்டுவிட வேண்டும். நாலு ஐந்து விநாடி அப்படியே தலையைத் தூக்கி வைத்திருக்க வேண்டும். இப்பொழுது மூச்சு சௌகரியப்படி விடலாம். பிறகு நிதானமாய் மூச்சு விட்டுக் கொண்டே தலையைக் கீழே இறக்கிச் சாதாரண நிலைக்கு வரவும்.

பிறகு வேறொரு விதமாகச் செய்ய வேண்டும். முன் விவரித்தது போலவே செய்து, கையை மடக்காமல் நிமிர்த்தி இன்னும் தலையையும், புஜங்களையும் பின் பக்கம் கூடுமானவரை வளைத்துப் பார்ப்பது. இதிலும் அடி வயிறும், தொப்புளும் தரையில் ஒட்டியிருக்க வேண்டும்.

இந்த இரண்டு விதங்களிலும் மூன்றிலிருந்து ஆறு தடவை, ஒவ்வொன்றையும் செய்யலாம். முதலில் விவரித்ததை முதலிலும், பின்பு விவரித்ததைப் பிறகும் செய்ய வேண்டும்.

சிலருக்குத் தலையை நிமிர்ந்து மேலே பார்க்கும்போது பின் குதிகால்கள் ஒட்டாமல் பிரிந்து போகும். அப்படிப் பிரிந்து வைத்திருந்தால் சுலபமாகவும் செய்ய வரும். அப்படிச் செய்யாமல் ஒட்டியே வைத்து நிமிர்ந்து பார்க்க முயல வேண்டும்.

சிலருக்கு மேலே தலையைத் தூக்கிப் பார்க்கும் போது காலிலிருந்து உடல் ஒரே பலகை மாதிரி தூக்கும். கொஞ்சங்கூடப் பின்னுக்கு வளையாது. அப்பேர்ப்பட்டவர்கள் நடு முதுகைத் தாழ்த்தி, அடி வயிறு, தொப்புள் தரையில் ஒட்டும்படி முயற்சி செய்ய வேண்டும். விடாமல், முயற்சி செய்தால் சில நாட்களில் சரியான நிலை வந்து விடும்.

சிலருக்குக் கழுத்தைப் பின் பக்கம் வளைத்துப் பார்க்க முடியாது. பின் கழுத்துச் சதை கனத்துத் தடுக்கும். நரம்புகள் வலிக்கும். சிலருக்குக் கைகள் நடுங்கும். இவைகளெல்லாம் நாளாவட்டத்தில் மறையக் கூடியதே.

இந்த ஆசனம் செய்யும் போது சிலருக்கு வாய் திறந்து விடும். சிலர் வாயின் வழியாகவும் மூச்சுவிடுவார்கள். எப்பொழுதும் எந்த ஆசனம் செய்யும் போதும், வாய்மூடியே இருக்க வேண்டும். வாய் வழியாக மூச்சு இழுக்கவோ விடவோ கூடாது. மூக்கின் வழியாகவே இழுக்க வேண்டும். மூக்குத் துவாரங்களில் சிறு மயிர்கள் முளைத்திருக்கும். அவை காற்றிலுள்ள தூசிகளை வடிகட்டி, சுத்தமாக்கி உள்ளே அனுப்புகிறது. வாயின் வழியாகச் சுவாசித்தால் தூசியுடன் கலந்த காற்றே உட்செல்லும். அதனாலும் பல கெடுதல்கள் உண்டாகலாம். காற்றை இழுக்கவும், விடவும் மூக்கைக் கடவுள் சிருஷ்டி செய்திருக்கும் போது, நாம் ஏன் வாயை உபயோகிக்க வேண்டும்? ஆசனம் பழகும் போது அதிகம் பேசக் கூடாது.

இந்த ஆசனத்தை செய்வதால் நமக்கு ஏற்படும் நன்மைகள்: புஜங்காசனத்தின் முதல் முறையில் முதுகெலும்பின் மேல் பாகத்திற்குப் பயிற்சி ஏற்படுகிறது. இரண்டாவது முறையில் நடு பாகத்திற்கும் பயிற்சி உண்டாகிறது. ஆகவே முதுகெலும்பு இளமை அடைகிறது. கழுத்தும் தோள்பட்டையும் வலுவடைகிறது. கழுத்துச் சுளுக்கு, வலி முதலியன ஏற்படாது. அப்படி ஏற்பட்டாலும்



ஆசனங்களைக் கண்டு பிடித்தோர் இவற்றையெல்லாம் பார்த்துத்தான் கண்டு பிடித்தார்கள். ஆதலால் ஆசனங்களுக்கு இம்மாதிரி பெயர்கள் இட்டிருக்கிறார்கள் போலும். எண்பத்திநாலு லக்ஷம் ஜீவராசிகள் என்றால் எண்பத்திநாலு லக்ஷம் ஆசனமும் இருக்கிறதாம்.

அதிக நேரம் இருக்காது. மணிக் கணக்காய்க் குனிந்து எழுந்து வேலை செய்யும் எழுத்தாளர்களுக்கும், குமாஸ்தாக்களுக்கும், கம்பாஸிட்டர்களுக்கும், டைப்பிஸ்ட்டுகளுக்கும், சித்திரக்காரர்களுக்கும் இது ஒரு சிரம பரிகாரம். கூனிய முதுகை நிமிர்த்தும். சுவாஸப் பைக்கு இந்த ஆசனத்தில் தாராளமாய் இடம் கிடைப்பதால் நன்றாய் விரிந்து, அதுவும் சிரம பரிகாரம் செய்து கொள்ளும். பிராண வாயு, விரிந்த நுரை ஈரலின் ஒவ்வொரு சந்து பொந்துகளுக்கும் போவதால், காசம், க்ஷயம் முதலிய கிருமிகள் நாசம் ஆகும். இரத்தம் சுத்தமாகும். இடுப்பு வலுவடையும். வயிற்றுச் சதைகளும் இழுக்கப்படுவதால், அதற்கும் லேசாய்ப் பயிற்சி உண்டாகிறது.

இதன் பெயரே சர்ப்பாசனம். நல்ல பாம்பு படம் விரித்தாடும்போது இருக்கும் ஒரு நிலை. பாம்புக்கு நீள எலும்புகள் கிடையாது. தலையிலிருந்து வால் நுனி வரை வரிசையாய் மணி கோத்தாற் போல் எலும்பு வளையங்களும் அதைச் சேர்ந்த பக்கங்களில் பாதி வளைவாய் மெல்லியதாய் வளைந்த எலும்புகளுமே அதன் உடலைத் தாங்குவது. அது எந்தப் பக்கமும் வளையும், துவளும். ஆனால் அதற்குச் சந்தோஷம் வரும் போதும், கோபத்தில் சீறும்போதும் வால் நுனியை மட்டும் தரையில் ஊன்றி, கம்புபோல நிமிர்ந்து நிற்கும். அவ்வளவு சக்தி அதன் முதுகெலும்புக்கு இருக்கிறது. அந்த சக்தியை நாம் சர்ப்பாசனம் போட்டு முதுகுத் தண்டை இளமைப் படுத்திக் கொள்ளுவதின் மூலம் பலப்படுத்த முயற்சி செய்ய வேண்டும்.

ஒவ்வொரு உயிர்ப்பிராணியும் அதனதன் சக்தி, அறிவுக் கேற்ப, அதன் உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளுகின்றது. ஆறறிவு படைத்த மனிதன் தான் உடலைச் சோம்பேறிச் சாலையாக்கி நோய்களுக்கு இரையாக்கி வருகிறான்.

புள்ளினங்கள் அதிகாலை நேரங்களில் எவ்வளவு இனிமையாகப் பாடுகின்றன! சற்று பொழுது புலர்ந்ததும் கூட்டம் கூட்டமாக வானில் வட்ட மிட்டுப் பறக்கின்றனவே, எதற்காக? இரை தேடவா? அல்ல. இரவு முழுவதும் கூண்டில் அடைபட்டிருந்த சிரமத்தைப் போக்க, தேகத்திற்குச் சூடு உண்டாக்க அப்படிப் பாடிக் களித்துப் பறக்கின்றன. இனிய பகற் பொழுதை வரவேற்கின்றன.

சாதாரணமாய் நம் வீடுகளில் வளரும் நாய், பூனைகளையும் நாம் பார்க்கலாம். நாய் ஓரிடத்தில் சற்று அதிக நேரம் உட்கார்ந்து விட்டாலோ அல்லது காலையில் எழுந்ததும் அது என்ன செய்கிறது? பின்னங் கால்களைப் பின்னுக்குத் தூரமாக வைத்துப் பின் பக்கம் தாழ்த்தித் தலையை நிமிர்த்தி நெட்டொடிக்கிறது. பிறகு முன்னங்கால்களைத் தாழ்த்திப் பின் பக்கம் தூக்கித் தலையைத் தாழ்த்தித் தண்டால் எடுக்கிறது. இவற்றையெல்லாம் யார் செய்யச் சொல்லிக் கொடுக்கின்றனர்?



பூனையைப் பாருங்கள்! நடு முதுகைக் கோபுரம் போல வளைத்து, நான்கு கால்களை நெட்டாக வைத்து, நரம்புகளையெல்லாம் இழுத்துக் கொள்ளும். இப்படி அதன் நரம்புகளையும் முதுகு எலும்புகளையும் சரிப்படுத்திக் கொண்டுதான் வேறு காரியங்கள் செய்யும். உடம்பையும் அடிக்கடி உதறிக் கொள்ளும்.

குரங்கைப் போல ஆட மனிதனால் முடியுமா? இயற்கை உணர்ச்சி தூண்ட அவைகள், உடலை வளைத்து, இழுத்துச் சீர் செய்து கொள்ளுகின்றன.

ஆனால் மனிதனோ நாகரிக மோகத்தால் தேக உழைப்பை உதாசீனம் செய்கிறான். நடந்து போவது மதிப்புக் குறைவு. ஒரு சிறு பை அல்லது பொட்டலமாக இருந்தாலும், ஸ்டேஷன் வரையில் அதை ஒரு ஆள் தூக்கி வரவேண்டும். அதிலும் பெண்கள் நடந்து போவது மிகமிக மதிப்புக் குறைவு. தன் காரியத்தைத் தனக்கே கவனிக்கத் தெரியாது. காலையில் எழுந்ததும் பல் தேய்க்கும் பிரஷுக்குப் பசை தடவிக் கொடுப்பது முதல் இரவு படுக்கை விரித்துப் போடுவது வரை பிறர் செய்து கொடுக்க வேண்டும். தன் வேலைகளைத் தானே செய்துகொள்ளும் வழக்கம் மறைந்து வருகிறது. எங்கு இவர்களுக்கெல்லாம் ஆரோக்கியம் கிட்டும்! யமபாணமாகிய நோய்கள் வந்து அணுகும் வரை, தேகாப்பியாசம் நல்லதா, தேங்காய்ப் பாயசம் நல்லதா என்று தர்க்கித்துக் கொண்டே இருப்பார்கள்.

வழக்கமாய் ஆசனங்கள் செய்து வரும் ஸ்திரீகள் கர்ப்பமானால் இந்த ஆசனத்தை மூன்று மாதம் வரையில் செய்யலாம்.

# பொழுது போக்கு

"தும்பி"

சுதந்திர இந்தியாவில் ரயில் விபத்துகளுக்கு அடுத்தபடியாக என் கவனத்தைக் கவருவது தேசமெங்கும் நடமாடிக் கொண்டிருக்கும் விசாரணைக் கமிட்டிகள்தான். நாளுக்கு நாள் புதுப்புதுக் கமிட்டிகள் ஏற்பட்டுப் பெருகிக் கொண்டே போகும் வேகத்தைப் பார்த்தால் அடுத்த இரண்டு மூன்று வருஷங்களில் முப்பத்தைந்து கோடி ஜனத்தொகையுள்ள நம் தேசத்தில் முப்பத்தாறு கோடி கமிட்டிகள் உற்பத்தியானாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

இந்தக் கமிட்டிகளை எந்த விஷயத்தைத் தான் ஆராய்ந்து விசாரிக்க ஏற்படுத்துகிறது என்பதில் வித்தியாசம் காட்டாதது நம் அரசாங்கத்தின் பரந்த மனப்பான்மையைத் தான் காண்பிக்கிறது.

காப்பிக்கொட்டை விலை உயர்ந்துவிட்டதா? ஏன் விலை உயர்ந்தது என்பதை விசாரிக்க ஒரு கமிட்டி. சர்க்கரை கிடைக்கவில்லையா? ஏன் கிடைக்கவில்லை யென்பதை ஆராய ஒரு கமிட்டி. அதேபோல, மாடுகள் சரியாகத் தீனி தின்னவில்லையா? அதற்கு ஒரு கமிட்டி. குதிரைகள் கொள்ளைத் தின்ற பிறகு கனைக்கவில்லையா? அதற்கு ஒரு கமிட்டி. ரயில் கவிழ்ந்ததா? எப்படிக் கவிழ்ந்ததென்று விசாரிக்க ஒரு கமிட்டி. ரயில் கவிழவில்லையா? ஏன் கவிழவில்லை யென்பதை ஆராய ஒரு கமிட்டி.

ஒரு கமிட்டி யென்றால் அதில் எத்தனை பேர்கள்தான் அங்கத்தினர்களாய் இருப்பார்கள் என்று சொல்ல முடியாது. ஆனால், எத்தனை அங்கத்தினர்களிருந்தாலும் அவர்களுள் தலைவர் என்று மாத்திரம் ஒருவர் கட்டாயம் இருப்பார். பத்து அங்கத்தினர்களைக்கொண்ட ஒரு கமிட்டிக்கும் ஒரு தலைவர் இருப்பார். இரண்டு பேர்களைக்கொண்ட ஒரு கமிட்டிக்கும் ஒரு தலைவர் இருப்பார். ஆனால் ஒருவரையே அங்கத்தினராகக் கொண்ட 'கமிட்டி'க்குத் தலைவர் யார் என்று நாம் மண்டையைக் குழப்பிக் கொள்ளவேண்டாம். பிறகு நம் குழப்பத்தையும் ஆராய்ந்து விசாரிக்க ஒரு கமிட்டி ஏற்பட்டு விடும்.

தேசத்தில் எத்தனை விசாரணைக் கமிட்டிகள் இருக்கின்றனவோ அத்தனை 'ரிபோர்ட்டு'களும் கட்டாயம் இருந்தே தீரும். அங்கத்தினர்களும் தலைவரும் மண்டையைக் குழப்பிக் கொண்டு தங்கள் மூளையை அலசி ஆராய்ந்து கடைசியில் 'மட்டைக்கு இரண்டு கீறு' என்ற மகத்தான உண்மையைக் கண்டு பிடித்து அறிக்கை வெளியிடுகிறார்களே அதற்குத்தான் 'ரிபோர்ட்டு' என்று பெயர்.

காப்பிக்கொட்டை ரிபோர்ட்டைப் படித்தால், காப்பிக்கொட்டை அதிகமாகக் கிடைக்காததால்தான் விலை உயர்ந்துவிட்டதென்ற அபூர்வ உண்மையைத் தெரிந்து கொள்ளலாம். சர்க்கரை ரிபோர்ட்டைப் படித்தால் சர்க்கரை விலையைக் கண்ட்ரோல் செய்ததால்தான் அது கிடைக்கவில்லை என்ற அதிசயத்தை அறிந்து கொள்ளலாம்.

அதேபோல, மாடுகளுக்குச் சரியாகத் தீனி யாரும் போடாததால்தான் அவைகள் தீனி தின்னவில்லை யென்று கஷ்டப்பட்டு கண்டு பிடித்த விஷயத்தை 'மாட்டுக் கமிட்டி' ஒரு அறிக்கையாக வெளியிடும். குதிரைகள் கொள்ளைத் தின்ற பிறகு கனைக்காமலிருப்பதற்குக் காரணம் அவைகள் கொள்ளையே தின்னாமல் இருப்பதுதான்; அவைகள் கொள்ளைத் தின்னாமலிருப்பதற்குக் காரணம் குதிரை வண்

டிக்காரர்கள் கொள்ளைத் தாங்களே தின்று விடுவதுதான் என்று 'குதிரைக் கமிட்டி' அறிக்கை ஒன்று வெளியிடும். ஆனால் குதிரை வண்டிக்காரர்கள் கொள்ளைக் குதிரைகளுக்கு வைக்காமல் ஏன் தாங்களே தின்றுவிடுகிறார்கள் என்ற விஷயத்தை இந்தக் 'குதிரைக் கமிட்டி' ஆராயாது. அதில் அக்கறையும் காட்டாது. ஏனென்றால் இந்த விஷயம் அதனுடைய எல்லைக்கு அப்பாற்பட்டதாம். இந்த விஷயத்தை பற்றிய இன்னொரு 'குதிரை வண்டிக்காரர்கள் கமிட்டி' ஏற்பட்டு அதுதான் ஆராய வேண்டும். 'குதிரைக் கமிட்டி' வரம்பு மீறி 'குதிரை வண்டிக்காரர்கள் கமிட்டி'யின் விஷயத்தில் தலையிடக் கமிட்டியின் விதிகள் இடம் தராது.

ரயில், தண்டவாளத்தின் மேல் ஒழுங்காகப் போனதால் கவிழவில்லை என்ற அற்புத விஷயத்தை ஆராய்ந்து '(ரயில்) கவிழாத கமிட்டி' அறிக்கை விடும்போது எனக்கு ஆச்சரியம் ஏற்படுவதில்லை. ஆனால் சமீபகாலத்தில் ஏற்பட்ட (எத்தனையோ ரயில் விபத்துக்களில்) ஒரு ரயில் விபத்து எக்காரணத்தால் உண்டாயிற்று என்பதை ஆராய ஏற்படுத்தப்பட்ட ஒரு கமிட்டியின் அறிக்கையைப் படித்ததும் எனக்கு உண்டான வியப்புக்கு அளவில்லை. அந்த அறிக்கையைப் படித்தபோதுதான் '(ரயில்) கவிழ்ந்த கமிட்டி'யின் சாமர்த்தியமும் சாகசமும் எனக்குத் தெரியவந்தது. எவ்வளவு கஷ்டப்பட்டுத்தான் அந்த ரயில் விபத்திற்குக் காரணம் கண்டுபிடித்து இருக்கிறார்கள்! அவர்கள் அறிக்கையின் முக்கிய அம்சம், ''தண்டவாளத்தின் கம்பியை வெளிப் பக்கம் வளைத்திருப்பதால்தான் ரயில் கவிழ்ந்தது'' என்பதுதான். அடாடா! இந்தக் கமிட்டியைத் தவிர வேறு யாராலும் இந்த விஷயத்தைக் கண்டு பிடித்திருக்க முடியுமா! பூதக் கண்ணாடி வைத்துக் கொண்டுதான் தண்டவாளக் கம்பி வெளிப் பக்கம் வளைந்திருப்பதை கமிட்டி கண்டு பிடித்திருக்கவேண்டும்! இதிலிருந்து, ''தண்டவாளக் கம்பி வெளிப் பக்கம் வளைந்திருப்பதால்தான் ரயில் கவிழ்ந்திருக்கிறது. கம்பி மட்டும் உள் பக்கம் வளைந்திருந்தால் தண்டவாளம் பெயர்ந்திருந்தால்கூட ரயில் கட்டாயம் கவிழ்ந்திருக்காது!'' என்ற ரகசிய உண்மை தெரிய வருகிறது!

அவ்வளவுதான்! அறிக்கை விட்டவுடன் விசாரணைக் கமிட்டியின் கடமை தீர்ந்தது! இனிமேல் அடுத்த தடவை ரயில் தண்டவாளத்தை விட்டுக் கீழே யிறங்கிப் புல் மேயப் போகும் வரை தேசத்தில் யாதொரு ரயில் விபத்தும் கண்டிப்பாய் நேராது! அப்படி நேர்ந்தாலும் இன்னொரு விசாரணைக் கமிட்டி இருக்கவே யிருக்கிறது!

* * *

ரயில் பிரயாணம் செய்யும்போதுதான் விபத்துகள் ஏற்படும் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் சினிமா பார்க்கும் போதும் ரயில் விபத்துகளைவிட பயங்கரமான ஆபத்துகள் ஏற்படுகின்றன என்பது சில காலமாகத்தான் எனக்குத் தெரிய வந்தது!

இளவரசன், இளவரசி என்ற ஆபத்துகளைத் தாண்டி, அவர்கள் ஜோடியாகப் பாடும் காதல் பாட்டுகள் என்கிற விபத்துகளையும் சமாளித்து, ஹாஸ்யம், வீரம், சோகம் என்கிற நெருக்கடிக் கட்டங்களையும் ஒரு கை பார்த்துவிட்டு 'அப்பாடா' என்று ஓய்ந்தால் 'கத்திச் சண்டை' என்று ஒன்று வந்து பயமுறுத்துகிறது. தங்களைவிட இரண்டு பங்கு நீளமான பட்டாக்கத்திகளை இளவரசர்கள் (சில சமயங்களில் இளவரசிகளும்) பயங்கரமாகச் சுழற்றிப் புன் சிரிப்புடன் எனக்கு நேராக நீட்டும்போது திகிலாயிருக்கிறது. ஒன்றும் அறியாத (அல்லது அறியாமல்) சினிமா பார்க்க வந்த என்னை அநியாயமாகக் குத்தி விடப்போகிறார்களே என்றுதான் திகில். ஆனால் பயங்கரக் கத்திச் சண்டைகளின் நடுவில்கூட அவர்கள் புன் சிரிப்பு சிரித்துக்கொண்டே யிருப்பதைப் பார்த்ததும் எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அந்தப் புன்சிரிப்பு ஒன்றே போதுமே ஆளைக் கொல்ல, பட்டாக்கத்தி வேறு வேண்டுமா என்றுதான் எனக்குத் தோன்றுகிறது!

* * *

வாரா வாரம் ஜனங்கள் அரிசி ரேஷன் வாங்குவதுபோல கனம் மந்திரியும் வாரந்தோறும் அரிசியின் நிலைமையைப்பற்றிப் பேசி வருவது வழக்கம். ஆனால் போன வாரம் ஜனங்களுக்குச் சில இடங்களில் ரேஷன் கடைகளில் அரிசி கிடைக்காததுபோல கனம் மந்திரிக்கு அரிசி(யைப்பற்றிப் பேச விஷயம்) கிடைக்கவில்லை போலிருக்கிறது. எனவே அவர் சென்ற வாரம் மரங்களைப்பற்றிப் பேசியிருக்கிறார். ''வன மகோற்சவத்தின் போது தேசமெங்கும் நடப்பட்ட மரங்களைப் பதினைந்து அடிக்கொன்று வீதம் நிறுத்தி வைத்தால் லக்ஷம் ஏக்கராக்களை அடைத்துக் கொள்ளும்'' என்று அவர் சொல்லியிருக்கிறார். புள்ளி விவரத்தின் மூலமாக வனமகோற்சவத்தின் வெற்றியை ஜனங்களுக்கு அறிவித்து அவர்களைத் திகைக்க வைக்க வேண்டுமென்பது மந்திரியின் ஆசை போலிருக்கிறது. அவர் எண்ணம் அப்படியிருந்தால் ஜனங்களை மேலும் திணறவைக்க இன்னும் ஒரு வழி யிருக்கிறது.

''பதினைந்து அடிக்கொரு மரம் வீதம்'' என்பதை மாற்றி ''முப்பது அடிக்கொரு மரம் வீதம்'' அல்லது ''அறுபது அடிக்கொரு மரம் வீதம்'' என்று வைத்துக்கொண்டால் மந்திரியின் கணக்குப்படி மரங்கள் இரண்டு லக்ஷம் அல்லது நாலு லக்ஷம் ஏக்கராக்களை அடைத்துக்கொள்ளும். மரங்களிருக்கும் இடைவெளியை அதிகரித்துக்கொண்டே போனால் கடைசியில் நாடெல்லாம் காடாய்ப் போகும் நிலைமைக்கு வந்து விடலாம்.

ஆனால் சில சந்தேகப் பேர்வழிகள் மட்டும், ''மந்திரி மரங்கள் நடப்பட்டதை மட்டும் தானே கணக்கெடுத்திருக்கிறார். அவைகளில் எத்தனை மரங்கள் நட்டவுடனேயே தண்ணீரில்லாமல் பட்டுப் போயின; எத்தனை மரங்கள் கவனிப்பில்லாமல் நசித்துப் போயின'' என்றெல்லாம் கேட்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் நாம் சொல்லக்கூடிய ஒரே பதில் நட்டுப் பட்டுப் போன மரங்களைப்பற்றி விசாரணை நடத்த ஒரு கமிட்டி நியமிக்கப்படும் என்பதுதான்!

அட்டைப்பட விளக்கம்

# ஒரு அசல் திராவிடர்

கொடுக்கிற தெய்வம் கூரையைப் பொத்துக்கொண்டு கொடுக்கிறது. அதிர்ஷ்டம் வரும்போது யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் திடீரென்று வருகிறது. பாரத அரசாங்கத்தின் விளம்பர இலாகா மந்திரி ஸ்ரீ ஆர். ஆர். திவாகர் ஏற்கெனவே சில தடவை சென்னைக்கு விஜயம் செய்திருக்கிறார். ஆனால் அப்போதெல்லாம் அவரை ஏனென்று கேட்பார் இல்லை. அவர் விஷயத்தில் சென்னை மந்திரிகள் கூடச் சிறிது பராமுகமாகவே இருந்து விட்டார்கள். ஆகையால் ஸ்ரீ திவாகர் முன் முறைகளில் வந்ததும் போனதும் மக்களுடைய கவனத்தைக் கவராமலே நிகழ்ந்து விட்டன.

ஆனால் இரண்டு வாரத்துக்கு முன்பு ஸ்ரீ ஆர். ஆர். திவாகர் சென்னைக்கு வந்திருந்தபோது தென்னிந்திய மக்கள் நிமிர்ந்து உட்கார்ந்து, "ஆர். ஆர். திவாகரா! அவர் ஆர்! அவர் ஆர்!" என்று கேட்கத் தலைப்பட்டனர்.

"ஓஹோஹோ! இந்திய அரசாங்கத்தின் மந்திரியா! அப்படி ஒரு மந்திரி இருக்கிறாரா! விளம்பர இலாகா மந்திரியா அவர்! அப்படியானால் தம்மைப் பற்றி இன்னும் கொஞ்சம் அதிகமாக விளம்பரம் செய்திருக்கக் கூடாதோ! அவருக்கு எந்த ஊர்! அவருடைய பூர்வோத்தரம் என்ன! தேசத்துக்கு அவர் செய்திருக்கும் தொண்டுகள் என்ன!" என்று ஆராய்ச்சி செய்யவும் தொடங்கினார்கள்.

ஹிந்தி பிரசார சபைக்கு எதிரிலும் ராஜாஜி மண்டபத்துக்கு முன்னாலும் ஸ்ரீ திவாகருக்குக் கறுப்புக் கொடி வரவேற்பு சிலர் நடத்தியதன் காரணமாகவே அவரைப் பற்றிச் சென்னை மாகாணத்து மக்கள் விசாரிக்கவும் நன்றாய்த் தெரிந்து கொள்ளவும் வசதி ஏற்பட்டது.

* * *

ஸ்ரீ திவாகர் கர்நாடகப் பிரதேசத்தில் தார்வார் என்னும் நகரைச் சேர்ந்தவர். கன்னடம் அவருடைய தாய் பாஷை. தேசத் தொண்டுக்குச் சாதனமாகப் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருந்தார். "சம்யுக்த கர்நாடகம்" என்னும் தினப் பத்திரிகையைச் சிறப்புடன் நடத்தி வந்தார். பழைய அடிமை இந்தியாவில் சுதந்திர உணர்ச்சியுடன் பத்திரிகை நடத்துவோருக்கு ஆபத்து வருவது இயல்பே யல்லவா! அத்தகைய ஆபத்து ஸ்ரீ திவாகருக்கும் வந்தது. பத்திரிகையை நிறுத்த வேண்டிய அவசியம் நேர்ந்தது.

அப்போது 1942-ம் வருஷத்துக்கு முன் பின்னான காலம். தேசத்தில் விடுதலை இயக்கம் சுடர்விட்டுக் கொண்டிருந்த காலம். ஸ்ரீ திவாகர் 'சம்யுக்த கர்நாடகம்' என்னும் பத்திரிகையை நிறுத்திவிட்டு, மேற்படி பத்திரிகைக் காரியாலயத்தையும் மூடிவிட்டார். பிறகு, அவர் என்ன ஆனார் என்று சில காலம் வரையில் யாருக்கும் தெரியாமலிருந்தது.

திடீரென்று ஆளைக் காணாமற் போகவே, ஸி. ஐ. டி. இலாகா கவலைக் குள்ளாயிற்று. அந்த இலாகாவின் சூரர்கள் பலர் ஸ்ரீ திவாகரைத் தேடலானார்கள். மாதங்கள் பல சென்றன. பம்பாயில் ஸ்ரீ திவாகர் வேறு பெயருடன் புரட்சி வேலையில் ஈடுபட்டிருப்பதாகத் தகவல் கிடைத்தது. அதன்பேரில் பம்பாயில் வலை போட்டுத் தேடத் தொடங்கினார்கள். ஏதோ ஒரு பத்திரிகைக் காரியாலயத்தில் விசாரித்தால் துப்பு அகப்படும் என்று தெரிந்தது.

குறிப்பிட்ட பத்திரிகைக் காரியாலயத்துக்கு ஒரு நாள் ஒரு பெரிய போலீஸ் அதிகாரி வந்து சேர்ந்தார். "பத்திரிகாசிரியரைப் பார்க்க வேண்டும்" என்றார். அவரைப் பத்திரிகாசிரியரின் அறைக்கு அழைத்துச் சென்றார்கள்.

போலீஸ் அதிகாரியைப் பத்திரிகாசிரியர் முகமன் கூறி வரவேற்று, "என்ன காரியமாக வந்தீர்கள்!" என்று கேட்டார்.

"தார்வார் நகரைச் சேர்ந்த திவாகர் என்பவர் இந்தப் பத்திரிகையுடன் தொடர்பு கொண்டிருப்பதாகக் கேள்வி. அவர் இங்கே வேலை செய்கிறாரா! அல்லது அவரைப் பற்றி ஏதாவது தகவல் தெரியுமா!" என்று போலீஸ் அதிகாரி கேட்டார்.

"சற்றுப் பொறுங்கள். விசாரித்துக்கொண்டு வந்து சொல்கிறேன்" என்று சொல்லிவிட்டுப் பத்திரிகாசிரியர் எழுந்து போனார். அவர் போன பிறகு போலீஸ் அதிகாரிக்குச் சந்தேகம் தட்டியது. அவரைப் பத்திரிகாசிரியர் அதிகமாகக் காத்திருக்கச் செய்யவில்லை. உள்ளே சென்றவர் உடையை மாற்றிக் கொண்டு மறுபடியும் வந்தார். "திவாகரைத் தேடுகிறீர்களாமே! நான்தான் அந்தத் திவாகர்! என்ன வேண்டும்!" என்று கேட்டார். "தயவு செய்து என் பின்னோடு வரவேண்டும்" என்று போலீஸ்காரர் கூறி அழைத்துப் போனார்.

தார்வாரிலிருந்து ஸ்ரீ திவாகர் பம்பாய்க்கு வந்து வேறு பெயருடன் புதிய பத்திரிகை ஒன்று தொடங்கிப் பல மாத காலம் நடத்தி வந்தார் என்று பின்னர் தெரிய வந்தது.

இப்படியெல்லாம் ஸ்ரீ திவாகர் தேசத் தொண்டு செய்து வந்தவர். 1921-ம் ஆண்டில் ஸ்ரீ ஆர். ஆர். திவாகர் வக்கீல் தொழிலை விட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து இரண்டு வருஷம் கடுங்காவல் தண்டனை அடைந்தார். பின்னர் தொடர்ந்து சுதந்திரப் போரின் முன்னணியில் நின்று வந்தார். தேச விடுதலைக்காக ஐந்து தடவை சிறை புகுந்தார். இத்தகைய தேச பக்தத் தியாகியானாலும், சென்னை மாகாணத்தவர்களுக்கு அவரைப் பற்றி அவ்வளவாகத் தெரியாமலிருந்தது.

இம் முறை ஸ்ரீ திவாகருக்குக் கறுப்புக்கொடி பிடித்தவர்கள் நல்ல வெளிச்சம் போட்டு அவரைப் பற்றித் தெரியப் பண்ணினார்கள்.

தமக்காகக் கறுப்புக்கொடி வரவேற்பு சிலர் நடத்தியது ஸ்ரீ திவாகருக்கு மிக்க வியப்பையும் குதூகலத்தையும் உண்டு பண்ணியதாம்.

"திராவிடக் கட்சியாரா இதை நடத்துகிறார்கள்! எதற்காக! நானும் ஒரு அசல் திராவிடன் தானே!" என்று ஸ்ரீ ஆர். ஆர். திவாகர் கேட்டபோது அவருடைய உள்ளத்தில் உண்டான வியப்பும் மகிழ்ச்சியும் முகத்தில் நன்கு பிரதிபலிக்கின்றன அல்லவா!



# ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷதம்

## 28. இன்னும் ஏன் பொய்யும் திருட்டும்

விடுதலை யடைந்து விட்டோம்; நம்முடைய நாடு குடியரசு நாடாய் விட்டது. உலகத்தில் பெரும் கௌரவஸ்தானம் நம் தேசம் பெற்று விட்டது. நம்முடைய தலைவரை உலகப் பெரியோர்கள் அனைவரும் மிகப் பெரியவராகப் புகழ்ந்தும் வணங்கியும் வருகிறார்கள். இப்படி யெல்லா மிருந்தும், ஏன் நாம் இன்னும் பிச்சைக்காரர்களாகவும் மோசக்காரர்களாகவும் நடந்து கொள்ளுகிறோம்?

பொய்யும் மோசமும் வாழும் வழி என்று ஏன் நாம் எண்ணுகிறோம்? எச்சில் சோற்றைத் தேடித் திரியும் நீசர்களைப் போல் ஏன் நடந்து கொள்ளுகிறோம்? நம் பாரத தேவியின் பெரும் பதவியை நாம் அறியாமல் அநியாயமாக நம்மை நாம் ஏன் தாழ்த்திக்கொள்ளுகிறோம்?

இவ்வாறு வருந்தி ஆராயும் தேச பக்தர்களுக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் அந்தக் காலத்தில் சொன்ன ஒரு கதையை எடுத்துச் சொல்லலாம்.

* * *

ஒருநாள் காட்டில் மேய்ந்து கொண்டிருந்த ஒரு ஆட்டு மந்தையைப் புலி ஒன்று தாக்கிற்று. புலி வயிற்றில் குட்டி யிருந்தது. முதிர்ந்த பிரசவப் பருவம். தாக்கின வேகத்தினால் அவ்விடமே குட்டி போட்டு விட்டுத் தாய்ப்புலி உயிர் நீத்தது.

குட்டி பிழைத்து, ஆட்டு மந்தையிலேயே வளர்ந்து வந்தது. ஆடுகளோடு ஆடாகப் புல் மேய்ந்து தன்னுடைய சுய சொரூபம் தனக்குத் தெரியாமல் வளர்ந்து வந்தது. ஆட்டுச் சுபாவத்தையே புலிக் குட்டியும் அடைந்து விட்டது.

சில ஆண்டுகள் கழிந்தன. அந்த ஆட்டு மந்தையை வேறொரு புலி ஒரு நாள் தாக்கிற்று. ஆடுகள் சிதறி ஓடின. அப்போது புலிக் குட்டியும் ஆடுகளைப் போலவே ஓடிற்று. தாக்கிய புலி தன் இனத்தைச் சேர்ந்த இந்தக் குட்டியைப் பார்த்து, இது எப்படி இங்கே வந்து சேர்ந்தது என்று வியந்து துரத்திப்போய் அதன் கழுத்தைக் கவ்விப் பிடித்தது. புலிக் குட்டி 'பா, பா' என்று ஆட்டுக் குட்டியைப் போல் கத்த ஆரம்பித்தது. கிழப் புலி அந்த ஆட்டுப் புலிக் குட்டியை ஒரு தண்ணீர் குட்டையண்டை இழுத்துப் போய்த் தண்ணீரில் அதன் பிம்பத்தைக்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

காட்டி "ஏ! மூடக் குழந்தாய்! நீயும் நானும் ஓர் இனம். அதோ பார், என்னைப் போலவே நீயும் இருக்கிறாய். ஏன் ஆட்டைப் போல பயந்து ஓடுகிறாய்? நீயும் என்னைப் போல் ஒரு புலிதான். பயப்படாதே!" என்றது. இப்படிச் சொல்லி ஆட்டிறைச்சித் துண்டை அதன் வாயில் போட்டு "தின்னு! தின்னு!" என்றது. முதலில் குட்டி தின்ன வில்லை. 'பா, பா' என்று கத்திக் கொண்டு வெறுப்புடன் இறைச்சியைத் தின்ன மறுத்தது. கொஞ்ச நேரத்திற்குள் நாக்கில் பட்ட இறைச்சியின் ருசி ஏறிவிட்டது. புலிச் சுபாவம் மேலிட ஆரம்பித்தது. இறைச்சித் துண்டைத் தின்றுவிட்டது. இன்னும் வேண்டுமென்றும் கேட்டது. அவ்வளவு நாள் மறைந்திருந்த புலிச் சுபாவம் மிக வேகத்தோடு இளம்ப ஆரம்பித்தது.



"நீ யார் என்பதை இப்போது தெரிந்து கொண்டாயோ? வா, என் கூட. ஆட்டு மந்தையில் இனி உனக்கு வேலையில்லை" என்றது பெரும் புலி.

**ப**ழைய அடிமை வாழ்க்கையின் குண விசேஷங்களை 'சீ' என்று நீக்கிக் கொண்டு சீக்கிரம் நமக்குரிய கௌரவத்தை அடைவோமாக. வறுமையல்ல துன்பம். சிறுமையே துன்பம். வறுமையிலும் பெருமையுடன் வாழலாம். அயோக்கியம் வேண்டாம். நம் பாரத தேவியின் புது கௌரவ நிலையைக் காப்பாற்றுவோமாக. திருட்டு, பொய், முதலிய பயங்காளி நீச சுபாவங்கள் வேண்டாம்.

# மகிழபுரி மன்னன்

## 2. அரசகுமாரி அமராவதி

மூர்ச்சையாகி விட்ட தீரனை ஒரே தூக்காய்த் தூக்கியது அந்த பயங்கர நாக்கு. அதிர்ச்சியில் தீரனின் கண்கள் திறந்து கொண்டன.

"என்னை விட்டு விடு. நான் உனக்கு என்ன தீங்கு செய்தேன்? ஒரு குற்றமும் செய்யாத என்னை ஏன் விழுங்குகிறாய்?" என்று படபடத்துடன் கேட்டான் தீரன்.

"எனக்கு மனிதர்களைக் கண்டால், பிடிக்கவே பிடிக்காது. அதற்குக் காரணம் உன்னைப் போன்ற ஒரு மனிதன்தான். அவன் என்னை ஏமாற்றி இப்படி பயங்கர உருவமாக ஆக்கி விட்டான். அதிலிருந்து எந்த மனிதன் எதிர்ப்பட்டாலும் அவனை அழித்து விடுவது என்று தீர்மானித்து விட்டேன்" என்றது அந்த நாக்கு.

"யாரோ ஒரு மனிதன் உன்னை ஏமாற்றியதற்காக எல்லா மனிதர்களையும் அழிக்க முற்படுவது நியாயமா?" என்று கேட்டான் தீரன்.

அந்தக் கொடிய பிசாசு பதிலே யளிக்கவில்லை.

ஆனால் தீரனுக்கோ மேலும் மேலும் பேச்சைத் தொடர்ந்து அதன் மனதைத் திருப்பி அக் கொடுமையிலிருந்து தப்பி விடவேண்டும் என்ற எண்ணம். ஆகவே, "உன்னை ஏமாற்றிய அந்த துராத்மா யார்?" என்று கேட்டான்.

"கேள்! நீ அந்தக் கதையைக் கேட்டால் நான் உன்னை விழுங்கப் போவதை ஆட்சேபிக்க மாட்டாய்!" என்று கூறிவிட்டு அந்தப் பயங்கர நாக்கு தன் கதையைச் சொல்லிற்று:

"மர்மபுரி என்னும் நாட்டைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா? நான் அந்த தேசத்தின் ராஜகுமாரன். எனக்கு வாலிப வயது வந்ததும் பல தேசங்களையும் சுற்றிப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் எழுந்தது. அதை என் தந்தையிடம் தெரிவித்தேன். அவரும் எனது வேண்டுகோளுக்குச் சம்மதித்தார். அப்பொழுது எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்தைச் சொல்லி முடியாது.

"பல நாடுகளையும் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தேன். ஒவ்வொரு நாட்டிலுள்ள அதிசயத்தையும் கண்டு ஆனந்தித்தேன். எந்த நாட்டுக்குப் போனாலும் அங்கே உள்ளவர்கள் மகிழபுரியைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்தனர். ஏன் தெரியுமா? மகிழபுரி அரசன் மிதுனவர்மனுக்கு ஒரே பெண். அவள் பெயர் அமராவதி. அவளுடைய அழகுக்கு ஈடு இணை இந்த உலகிலேயே கிடையாது. அந்தப் பேரழகியை மணந்து கொள்ளப் பல தேசத்து அரச குமாரர்களும் போட்டி போட்டார்கள். இவ்வாறு பலதேசத்து மக்களாலும் புகழப்படும் அந்தப் பேரழகியைக் காண வேண்டுமென்ற ஆவல் என் உள்ளத்திலும் எழுந்தது.

"உடனே மகிழபுரியை நோக்கிப் புறப்பட்டேன். பல நாடுகளைக் கடந்து இந்தக் காட்டுக்கு வந்து சேர்ந்தேன். வெகு தூரம் நடந்து வந்ததால் சிறிது

இளைப்பாற ஒரு மரத்தின் நிழலில் உட்கார்ந்தேன். அந்தச் சமயத்தில் யாரோ ஒருவன் என்னிடம் வந்தான். 'யார் நீ?' என்று என்னைப் பார்த்து அதிகாரத்துடன் கேட்டான். நானும் அவனுக்குப் பயப்படாமல் 'நீ யார்?' என்று திருப்பிக் கேட்டேன்.

'என்னை யாரென்று கேட்கிறாய்? நான் ஒரு மந்திரவாதி' என்றான் அவன். அதைக் கேட்டதும் எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. ஏன் தெரியுமா? அந்த மந்திரவாதியின் உதவியால் எளிதாக எனது ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்ற காரணத்தினால்தான்.

"'ஐயா! எனக்கு ஒரு உதவி செய்வீர்களா?' என்று ஆவலுடன் கேட்டேன். அதற்கு அவன், 'என்ன உதவி செய்ய வேண்டும்?' என்றான்.

"நான் அரசகுமாரி அமராவதியின் பேரழகில் ஆசை கொண்டுள்ளேன். அவளைக் கவர்ந்து வந்து என்னிடம் சேர்த்தால் உங்களுக்கு ஆயிரம் பொன் தருகிறேன்" என்றேன்.

"அதற்கு மந்திரவாதியும் இசைந்தான். பிறகு அவன், 'சரி! உன் உருவம் பிறர் கண்களுக்குப் புலனாகாமல் இருக்கும்படி எனது இந்த மந்திரக் கோலினால் மாற்றி விடுகிறேன். நீ அவளுடைய அரண்மனைக்குச் சென்று அவள் தனியாகத் தோட்டத்தில் உலாவும்பொழுது கவர்ந்து வந்து விடு" என்றான். அமராவதியின் பேரில் உள்ள அளவற்ற ஆசையினால் நான் அவ்வாறு செய்வதற்கு இசைந்தேன்.

"மந்திரவாதியும் தனது மந்திரக் கோலின் உதவியினால் என்னைப் பிறர் கண்களில் படாதவனாக மாற்றி விட்டான். என்னிடமிருந்த பொருள்களையெல்லாம் அவனிடம் கொடுத்துவிட்டு, நான் மிக்க மகிழ்ச்சியுடன் வாயு வேகமாக ஆகாயத்தில் பறந்து சென்று அமராவதியின் அரண்மனையை அடைந்தேன். குளத்தில் மீன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்து வாடியிருக்கும் கொக்கைப் போல நானும் அரண்மனை நந்தவனத்தில் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தேன்.

"மாலை வந்ததும் அமராவதி தனியாகப் பூப்பறிக்க வந்தாள். அதைவிடச் சரியான சந்தர்ப்பம் ஏது? அவள் பின்னால் சென்று அவளைக் கவர்ந்துகொண்டு வந்து விட்டேன். மந்திரவாதி இதே ஆலமரத்தினருகில் என் வரவுக்காகக் காத்துக்கொண்டிருந்தான்.

"ஆலமரத்துக்கு அருகில் வந்ததும் மந்திரவாதியைப் பார்த்து, 'ஏ மந்திரவாதியே! என்னை மறுபடியும் மனிதனாக மாற்றி விடு. அரசகுமாரியை எடுத்து வர உதவி செய்ததற்காக உனக்கு என்ன வெகுமானம் அளித்தாலும் அது தகும்' என்று மகிழ்ச்சியுடன் சொன்னேன்.

"அரசகுமாரி அமராவதியைப் பார்த்ததும் மந்திரவாதியின் மனம் மாறி விட்டது போலும்! அவன் என் அருகில் வந்து, 'வாலிபனே! எனக்கு உன்னுடைய பணம் வேண்டாம். எனக்கு இந்தப் பேரழகி அமராவதியையே கொடுத்து விடு. அப்படிச் செய்வதாக இருந்தால்தான் உன் உருவத்தை மாற்றுவேன்' என்றான். அதைக் கேட்டதும் எனக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை.

"எவனுக்காவது, தான் ஆசையுடன் அபகரித்து வந்துள்ள பொருளை இன்னொருவனுக்குக் கொடுக்க மனம் வருமா? 'கொடிய மந்திரவாதியே! அது நடக்காத காரியம். என்னிடமுள்ள அவ்வளவு பொருளையும்



வேண்டுமானால் எடுத்துக் கொள். ஆனால் அரசகுமாரியை மட்டும் தர மாட்டேன்' என்றேன் கோபத்துடன்.

"உடனே அந்த நயவஞ்சகனான மந்திரவாதி ஒரு கண்ணாடியைக் காண்பித்து, 'இதில் பார்! உன் உருவம் மாறிவிடும்' என்றான். அவன் ஆசை வார்த்தைகளில் மயங்கி அவன் கூறிய படியே அந்தக் கண்ணாடியை நோக்கினேன். என்ன ஆச்சரியம்! என் பழைய உருவம் வருவதற்குப் பதிலாக என் உருவம் பயங்கர அரக்கனின் நாக்காக மாறிவிட்டது. மந்திரவாதியின் வார்த்தைகள் உண்மையென்று கருதி மோசம் போய்விட்டேன். அவன் என்னை இந்த ஆலமரத்தினருகிலுள்ள பள்ளத்தில் தள்ளிவிட்டு அரச குமாரியுடன் போய் விட்டான். இப்பொழுது சொல், மனித வர்க்கத்தின் மேல் நான் கோபங்கொண்டதில் ஏதாவது தவறுண்டா?" என்று அந்தப் பயங்கர நாக்கு கேள்வியுடன் தன் கதையைக் கூறி முடித்தது.

அதன் கதையைக் கேட்டதும் தீரனுக்கு, தான் அந்த அபாயத்திலிருந்து தப்புவதற்கு ஒரு உபாயம் தோன்றிற்று. உடனே அவன், "உனக்கு அந்த மந்திரவாதியினால்தானே அவ்வளவு துன்பமும் ஏற்பட்டது? அவனுக்குத் தண்டனை யளித்து அந்த அரச குமாரியையும் மீட்டு விடுகிறேன். அப்படியானால் உனக்குச் சம்மதந்தானே?" என்று கேட்டான்.

"நீ என்னிடமிருந்து விடுதலைபெற்றதும் அதை நிறைவேற்றாமல் இருந்து விட்டால்?" என்று கேட்டது அந்த பயங்கர நாக்கு.

"இல்லை. உனக்கு வாக்குறுதி அளிக்கிறேன். அந்த மந்திரவாதிக்குக் கட்டாயம் கொடும் தண்டனை கொடுக்காவிட்டால் என் பெயர் தீரன் இல்லை."

"சரி! உன்னை விடுதலை செய்கிறேன். மந்திரவாதிக்கு உரிய தண்டனை அளித்து விட்டாலே போதும்" என்று கூறி அவனைத் தன் பிடியிலிருந்து விடுவித்தது அந்த நாக்கு. அப்பொழுதுதான் தீரனுக்குப் போன உயிர் திரும்பி வந்தது.

தீரன் அந்தப் பயங்கர நாக்கிடம் விடை பெற்றுக் கொண்டு தான் கொடுத்த வாக்குறுதியை எப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்று திடசங்கற்பம் செய்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அதற்குள் இருட்டிவிட்டது. வானத்தில் நட்சத்திரங்கள் 'மினுக் மினுக்' என்று பிரகாசித்துக் கொண்டிருந்தன. தீரன் கால் போனபடி நடந்து கொண்டிருந்தான். அவனுக்கு வழி ஒன்றும் தெரியவில்லை. இக்குந் தெரியாத காட்டில் தன்னந் தனியனாகப் போய்க் கொண்டிருந்தான். பசி வேறு காதை அடைத்தது. என்ன செய்வான், பாவம்! அந்த நடுக்காட்டில் அவனுக்கு உணவு அளிக்க யார் இருக்கிறார்கள்?

பசியும், களைப்பும் அவனை மேலே நடக்கவொட்டாமல் தடுத்தன. ஒரு மரத்தடியில் உட்கார்ந்தான். தூக்கம் கண்ணைச் சுழற்றியது. அங்கேயே படுத்து நன்றாகத் தூங்கி விட்டான்.



மறுநாள் காலை பொழுது விடிந்து வெகுநேரம் கழித்துத்தான் எழுந்திருந்தான். எழுந்ததும் அவனுக்கு ஏதாவது சாப்பிடவேண்டும் என்று தோன்றியது. முதல் நாள் மத்தியானம் சாப்பிட்டதுதானே? சமீபத்தில் ஏதாவது வீடு தென்படுகிறதா என்று பார்க்கப் புறப்பட்டான்.

அவனுடைய அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். அடர்ந்த மரங்கள் நிறைந்த அந்தக் காட்டில் கொஞ்ச தூரம் சென்றதும் ஒரு சிறிய மாளிகை தெரிந்தது. அதைக் கண்டதும் அவன் முகம் மலர்ந்தது. அம்மாளிகையை நோக்கி அவன் வெகு விரைவாக நடந்தான்.

அந்த மாட மாளிகைக்குள் நுழையும்பொழுது யாரும் அவனைத் தடுத்து நிறுத்தவில்லை.

கொஞ்சம் உள்ளே சென்றதும் அவன் கோர உருவம் படைத்த சிலைகளையும், சிற்பங்களையும் கண்டான். சில சிலைகள் கண்களைத் தானாகவே உருட்டி உருட்டி விழித்தன. வேறு சில சிலைகள் 'ஆ'வென்று வாயைப் பிளந்து பயமுறுத்தின. உயிர் அற்ற சிலைகள் அவ்வாறு செய்வதைக் கண்ட தீரன், 'இந்த மாளிகை யாரோ ஒரு மந்திர வாதியினுடையதாகத் தானிருக்க வேண்டும். சந்தேகமில்லை!' என்று முடிவுக்கு வந்தான். உடனே அவனுக்கு அரசகுமாரி அமராவதியின் ஞாபகம் வந்தது. 'அரசகுமாரி அமராவதி ஒரு வேளை இந்த மாளிகையிலே இருந்தாலும் இருக்கலாம் அல்லவா?' என்ற எண்ணம் உண்டாயிற்று. ஆகவே, தீரன் உடனே தைரியமாக அவளைத் தேடிக்கொண்டு உள்ளே போனான். அமராவதியை எங்கும் காணவில்லை. 'அவள் எங்கு இருக்கிருளோ? மந்திரவாதி எங்கே அடைத்து வைத்திருக்கிருனோ?' என்ற எண்ணத்தில் சோர்வுடனும் பசிக் களைப்புடனும் பக்கத்திலிருந்த பலகை ஒன்றில் உட்கார்ந்தான். அவன் உட்கார்ந்ததுதான் தாமதம்! அது 'கிர்'ரென்று சுற்றியது. அடுத்த கணம் அவனை அது பாதாளத்துக்கு இழுத்துச் சென்றது. (தொடரும்)

> **இரண்டு விடுகதைகள்**
>
> 1. எதிர் புதிர்போட்ட ராவணனுக்கு முதுகிலே முந்நூறு வடு.
> 2. பட்டுக் குடைபோல் பூ பூக்கும், பறிக்கப்போனால் எட்டாது.
>
> சென்ற வாரக் கணக்குக்கு விடை :— கிருஷ்ணன் பறித்த பழங்கள்—2.

# என்ன ஐயா, வேடிக்கை?

கொஞ்ச காலத்துக்கு முன் காஷ்மீரத்தில் போர் நடந்ததல்லவா? அப்பொழுது ஒரு தடவை நம் இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு காஷ்மீரத்தைப் பார்வையிடுவதற்காகத் திடீர் விஜயம் செய்திருந்தார். காஷ்மீர்ப் போரை நடத்திக் கொண்டிருந்த சேனாபதியைக் கண்டு, முன்னணிப் படை யுத்தம் நடத்திக்கொண்டிருக்கும் இடத்தைப் பார்வையிடத் தாம் விரும்புவதாக அவர் தெரிவித்தார்.

அதைக் கேட்ட சேனாபதி, "இப்பொழுது அந்த இடத்துக்குத் தாங்கள் போவது அபாயகரமானது. அங்கே அழைத்துக்கொண்டு போக முடியவே முடியாது!" என்று மறுத்து விட்டார்.

எப்படியாவது அந்த இடத்தைப் போய்ப் பார்த்து வரவேண்டும் என்பது ஜவாஹர்லால் நேருவின் எண்ணம். ஆகவே, அவர் தம் ஜாகைக்குத் திரும்பி வந்ததும், முதல் காரியமாக டெலிபோனை எடுத்து முன்னணிப் படை முகாமுக்குப் 'போன்' செய்தார்.

"யார் அது?" என்ற கேள்வி அங்கிருந்து வந்தது.

"நான்தான் ஜவாஹர்."

"ஜவாஹரா! யார் அது?"

"நான்தான் உங்கள் ஊழியன் ஜவாஹர்."

"எங்களுக்கு ஜவாஹர் என்ற பெயருடன் யாருமே ஊழியன் இடையாதே!" என்றது அந்தக் குரல்.

"நான்தான் இந்தியாவின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு!"

"என்ன ஐயா, வேடிக்கை? பண்டித நேருவாவது, எங்களுடன் பேசுவாவது? வீண் பேச்சுப் பேசி எங்களுக்குத் தொந்தரவு கொடுக்காதீர்கள்!" என்று சொல்லிக் கோபத்துடன் 'டக்' கென்று டெலிபோனை வைக்கும் சத்தம் கேட்டது.

இந்தியாவின் பிரதம மந்திரி நேருவுக்கு இம்மாதிரியெல்லாம் டெலிபோன் செய்யப் பொழுது எங்கே இருக்கப் போகிறது என்று அவன் எண்ணியது நியாயம்தானே?

—அகஸ்யம்.




# காதல்

ஆசிரியர்-சுதர்சன் மொழிபெயர்ப்பு-ரா.வீ

## 12. பிரேமபுரியில் பரூன்

அந்தக் காலத்திலே எகிப்து நாட்டின் சம்பிரதாயம் என்னவென்றால், பாதுஷா யுத்த களத்துக்குப் போவதற்கு முன்பாக நெருப்பு, இரும்பு, அதிர்ஷ்டம் இவற்றுக்கு அதிஷ்டான தேவதைகளான தெய்வங்களை வணங்கி வழிபட வேண்டும். அதற்குப் பின் தன்னுடைய பட்டமகிஷியின் ஏதாவதொரு விருப்பம் ஒன்றை—அது எவ்வளவு சிரம சாத்தியமாயினும் சரி—நிறைவேற்றி அவளைத் திருப்திப் படுத்த வேண்டும். அதற்குப் பின்னர் அவளிடம் அநுமதி பெற்று யுத்தகளத்துக்குச் செல்ல வேண்டும்.

ஆகவே, அன்று நள்ளிரவு கழிந்ததும், பரூன் செய்ய வேண்டிய பூஜை முதலானவற்றை முடித்துக்கொண்டு நியூனஸின் மயூர மாளிகைக்கு வந்து சேர்ந்தான். நேரே அவள் நியூனஸ் இருக்கும் இடத்துக்கு வந்து, "உனக்கு ஏதாவது விருப்பம் உண்டானால் தெரிவி. நான் எகிப்து நாட்டின் தொன்று தொட்டு வரும் பழக்கப்படி, அதை நிறைவேற்றி வைத்து விட்டு யுத்தத்துக்குப் போய் வருகிறேன்" என்று சொன்னான்.

நியூனஸ் தன்னுடைய மலர்போன்ற மென்மையான தேகத்தைப் பரூனின் காலடிகளில் பணிய வைத்தாள். பிறகு விசித்து விசித்து அழலானாள். அட கடவுளே! அவளுக்கு ரேம்பஸின் மீது காதல் ஏற்படாமல் இருந்திருக்கக் கூடாதா? அல்லது பரூன்தான் அவளுடன் இவ்வளவு நல்லவிதமாக நடந்து கொள்ளாமல் இருந்திருக்கக் கூடாதா?

பரூன் உடனே குனிந்து நியூனஸின் பூவுடலைத் தன் காலடிகளிலிருந்து தூக்கித் தன் அருகில் கட்டிலில் உட்கார வைத்துக் கொண்டான். பிறகு அன்பு தவழும் குரலில், "ஏதாவது விருப்பம் இருந்தால் சொல்லேன்!" என்றான்.

நியூனஸ் குனிந்த தன் தலையை நிமிர்த்தாமலேயே, "ஒன்றும் இல்லை!" என்று ஒரே வார்த்தையில் அவனுக்குப் பதில் சொல்லி விட்டாள்.

"விருப்பம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் வாய் திறந்து ஏதாவது கேளேன்! என் எதிரே வாய் திறக்கவே கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாயா? உனக்கு வேண்டியதைச்சொல்லு. வரவழைத்துத் தருகிறேன். அல்லது ஏதாவது செய்து போட வேண்டுமானாலும் சொல்லு. உனக்குத் தேவையான பொருள் ஒன்றை இன்று நீ கேட்டாக வேண்டும். நான் அதைப் பூர்த்தி செய்தாக வேண்டும். இது எகிப்து நாட்டுச் சம்பிரதாயம்! கேள்...உம்...கேள்!" என்றான் பரூன்.

"என் மனதில் இப்பொழுது எதுவும் வேண்டும் என்ற எண்ணமே எழவில்லை!" என்றாள் நியூனஸ்.

"உனக்குப் பிரியமானதைக் கேள். தாமதப் படுத்தாதே!" என்று மிகவும் குழைவுடன் சொன்னான் பரூன்.

"ஒன்றுமே வேண்டும் என்று தோன்றவில்லையே! என் மனதில் இப்பொழுது

"ஏதாவது வேண்டும் என்ற எண்ணம் எழுந்தால்தானே?" என்று தியூனஸ் மறுபடியும் அதே பதிலைச் சொன்னாள்.

"தியூனஸ்! உனக்கு வேண்டியதைக் கேள். இன்று நீ ஒன்றும் வேண்டாம் என்று சொல்லக் கூடாது. நீ எதைக் கேட்டாலும் அதைத் தருகிறேன்!" என்று சொன்னான் பரூன்.

தியூனஸின் கண்களில் நீர் முத்துப் போல் கோத்து நின்றது. அவள் கலங்கிய கண்களுடன் பரூனைப் பார்த்தவாறு, "எனக்கு என்ன வேண்டும்? ஏதாவது வேண்டியிருந்தால்தானே நான் கேட்பதற்கு? நீங்கள்தான் எனக்குச் சகலவித சௌகரியங்களும் செய்து வைத்திருக்கிறீர்களே? எனக்கு ஏதாவது குறையிருந்தால் அல்லவா நான் அந்தக் குறையை நீக்கிக் கொள்ள வேண்டும்?" என்று கேட்டாள்.

"என்ன? நான் நிறைவேற்றி வைக்கக்கூடிய காரியம் உனக்கு ஒன்றுமே இல்லையா? உன் மனதுக்குப் பிடித்த பொருளே கிடையாதா? சொல்லு! சங்கோசப் படாதே! எத்தனை கடினமான காரியமாக இருந்தாலும் சரி, நான் அதை நிறைவேற்றி வைக்கிறேன். நான் நினைத்தால் ஆகாத காரியம் என்று உலகத்தில் ஒன்றுகூடக் கிடையாது என்று அப்பொழுதேதான் நான் உனக்குச் சொல்லியிருக்கிறேனே! பயப்படாதே! சொல்லு, உனக்குத் தேவையானதைச் சொல்லு!" என்று மிகவும் பிடிவாதம் பிடித்தான் பரூன் அம்னஸ்.

'சொல்லுவேமா, வேண்டாமா?' என்று ஒரு கணம் தியூனஸ் யோசித்தாள்.

"என்ன யோசிக்கிறாய்? சொல்லு. பயப்படாதே!" என்று மேலும் உற்சாக மூட்டினான் பரூன்.

'ஆமாம்! சொல்லி விட்டால் என்ன?' என்ற எண்ணம் தியூனஸின் மனதில் எழுந்து சிந்தனையைக் கிளறியது.

"சொல்லேன், தியூனஸ்!" என்று அவசரப்படுத்தினான் பரூன்.

அடுத்த கணமே, 'சொல்லுவதா? கூடாது, கூடாது! சொல்லக்கூடாது!' என்ற எண்ணம் எழுந்து அவளுடைய மனதில் முதலில் தோன்றியிருந்த எண்ணத்தை அழித்து விட்டது.

பரூன் தன் ஆசனத்திலிருந்து எழுந்து அந்த அறைக்குள்ளேயே இங்கும் அங்கும் உலாவலானான். பிறகு சிறிது நேரத்துக்கெல்லாம் தியூனஸின் எதிரே வந்து நின்று, "இன்று யுத்த யாத்திரைக்குப் புறப்படவேண்டிய நான், நானோ பாதுஷா. நீயோ பட்டமகிஷி. இன்று நீ என்னிடம் ஏதாவது கேட்டு வாங்கிக் கொள்ளத்தான்



வேண்டும். நீ கேட்கும் பொருள் எதுவானாலும் சரி, உனக்குக் கிட்டும்படி செய்ய வேண்டியது என் பொறுப்பு. ஆகவே, நீ சற்றும் யோசனை செய்யாதே! உனக்கு வேண்டியதைக் கேள்!......... என்ன? உனக்கு ஒன்றுமே வேண்டாமா?" என்று திருப்பித் திருப்பிக் கேள்விக்கு மேல் கேள்வி கேட்டுத் தியூனஸைத் திக்குமுக்காட வைத்துவிட்டான் பருன் அம்னஸ்.

தியூனஸுக்குத் தன் எதிரே 'நம்பிக்கை கை கட்டி வாய் புதைத்துக் கொண்டு நிற்பது போலத் தோன்றியது.

"பாதுஷாவும் கணவனுமான நான் நிறைவேற்றி வைக்கக் கூடிய விருப்பம் ஒன்றுமே யில்லையா? சொல், பயப்படாதே!" என்று பருன் இன்னமும் துரிதப்படுத்தினான்.

தியூனஸுக்குத் தன்னெதிரே நம்பிக்கையுடன்கூட அவநம்பிக்கையும் கைகட்டி வாய்புதைத்து நின்று கொண்டிருப்பது போன்ற பலத்த பிரமை ஏற்பட்டது.

**ப**ருன் மறுபடியும் அந்த அறையிலே அங்கும் இங்கும் உலாவலானான். அவனுடைய மனம் சிந்தனை யோட்டத்திலே லயித்திருந்தது. சிந்தனை யோட்டத்துக்குத் தகுந்தவாறு அவனுடைய நடையிலும் வேகம் காணப்பட்டது. அவன் அப்படி உலாவிக் கொண்டிருக்கும் பொழுது தியூனஸ் இலேசாகக் கனைத்துக் கொண்டாள். அதைக் கேட்ட பருன் சட்டென்று நின்று விட்டான்.

தியூனஸ் மிகவும் மெதுவான குரலில், "எனக்கு ஓரே ஒரு ஆசை யிருக்கிறது. ஒருவேளை அது நிறைவேறுமோ, நிறைவேறாதோ என்று யோசனையாயிருக்கிறது. அதனால்தான்........." என்று சொல்லி மேலே சொல்லாமல் நிறுத்திவிட்டாள்.

"என்னால் அதை ஒரு வேளை நிறைவேற்றி வைக்க முடியாது என்று எண்ணுகிறாயோ?" என்று கேட்டான் பருன்.

"இல்லை. இல்லை! அப்படி யெல்லாம் இல்லை. வந்து...வந்து...அதாவது நான்... அதைச் சொல்ல விரும்பவில்லை!" என்று தட்டுத்தடுமாறித் தயங்கியவாறே சொன்னாள் தியூனஸ்.

பருன் இலேசாக இளநகை புரிந்தவாறே அவளைப் பார்த்தான். பிறகு, "கள்ளங்கபடமற்ற என் இதயராணி! நீ சொல்ல நினைத்ததைச் சொல்லாமலே தான் சொல்லி விட்டாயே! நான் அதைச் செய்வேனோ, மாட்டேனோ என்று சற்றும் பயப்படாதே! நீ சொன்ன காரியத்தை நான் மிகவும் சந்தோஷமாகச் சிரித்த முகத்துடன் நிறைவேற்றி வைக்கிறேன். கொஞ்சங்கூட யோசனை பண்ணாதே!" என்றான்.

அதைச் சொல்லி முடித்ததும், அதே இடத்தில் தோல் துண்டு ஒன்று கொண்டு வருமாறு வேலையாளுக்குக் கட்டளையிட்டான் பருன். அடுத்த சில வினாடிக்குள் தோல் துண்டு ஒன்று அவன் கையில் இருந்தது. அதில் ஏதோ எழுதி, அதன் மேல் அரசாங்க முத்திரை இடச் சொல்லி விட்டுத் தியூனஸின் பக்கம் திரும்பினான். "இப்பொழுது உனக்குச் சந்தோஷம் தானே? உன் மனதில் உள்ள ஆசையை நிறைவேற்றி விட்டேன்!" என்றான்.

தியூனஸ் கட்டுக்கடங்காத மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தாள். அடுத்த கணம் அவளுடைய உள்ளத்திலே தோன்றிய உவகை உடல் முழுவதும் வியாபித்தது. களை யிழந்து காணச் சகியாமல் கிடந்த முகம் களைபொருந்திக் காணப்பட்டது. ஏக்கத்தின் காரணமாகக் குழி விழுந்து போயிருந்த கண்கள் புத்தொளி பெற்று அலாதிச் சோபையுடன் விளங்கின. வானவீதி வழியே மிதந்து இன்ப லோகத்துக்கே சென்று விட்டதாக எண்ணி இதயம் பூரித்தாள் தியூனஸ்.

பருன் காவலாளியைக் கூப்பிட்டு, அந்தத் தோல் துண்டை அவன் கையில் கொடுத்தான். "இது அரச ஆக்ஞை. இதை இப்பொழுதே கல் உடைக்கும் கைதிகளின் இலாக்காத் தலைவனுக்கு அனுப்பி வைக்க வேண்டும்." என்று உத்தரவிட்டான்.

காவலாளி தோல் துண்டைக் கையில் எடுத்துக் கொண்டு, பாதுஷாவை வணங்கி



பேரன்:— தாத்தா! உனக்கு இந்த மாமாவை யார் என்று தெரிகிறதா?

தாத்தா :—இந்த உடம்பை எங்கேயோ பார்த்தமாதிரி இருக்கிறது. யார் என்றுதான் தெரியவில்லை!

னன். பிறகு பருனைப் பார்த்தவாறே அங்கிருந்து அவன் வெளியேறினான்.

பருன் அறையைச் சுற்றி நாற்புறமும் ஒரு முறை கூர்ந்து கவனித்தான். பிறகு மிகவும் மெதுவான குரலில், "இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் ரேம்பஸ் விடுதலை அடைந்து விடுவான்!" என்றான்.

அப்போது அவனுடைய குரலில் கோபமோ, தாபமோ கொஞ்சங்கூட இல்லை. தியூனஸ் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு பூமியில் கண்களைப் புதைத்த வண்ணம் ஏதோ மிகத் தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

'எவனுடைய கோபம் கொடுமை ஆகியவற்றின் கதைகளைக் கேட்டு, மக்கள் தங்கள் தங்கள் வீடுகளில் உட்புறமாகக் கதவைத் தாளிட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்த பொழுதிலும், நடுநடுங்கிக் கதி கலங்கிப் போகிறார்களோ, அதே பருன்தானா இவன்? நம்ப முடியவில்லையே! இப்பொழுது எவ்வளவு நல்லவனாகக் காண்கிறான்? எவ்வளவு சரள ஸ்வபாவம் படைத்தவனாகத் தோன்றுகிறான்? எத்தனை சாதுவாக இருக்கிறான்? இவ்வளவு நேர்மையும் நயமும் வாய்ந்த பருனா அந்தக் கொடுமைகளை எல்லாம் செய்திருக்கப் போகிறான்? இருக்கவே இருக்காது!' என்று எண்ண அலைகள் ஒன்றின்மேல் ஒன்றாகத் தியூனஸின் மனத் திரையில் எழுந்தன. அடுத்த சில கணங்களுக்கெல்லாம் தியூனஸின் கண்களில் நீர் வெண் முத்துப் போல் துளிர்த்து நின்றது.

பருன் வெளியே புறப்பட்டு விட்டான்.

இரவு நேரம். ஒரு காவலாளி சுவரில் முதுகை முட்டுக் கொடுத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தான். ஒரு வேளை அவன் ஏதாவது யோசித்துக் கொண்டிருந்தானோ அல்லது மிகவும் களைத்துப்போய் முதுகை முட்டுக் கொடுத்துக் கொண்டு நின்றானோ அல்லது தூக்கம் கண்ணைச் சுற்றித் தூங்கித்தான் வழிந்து கொண்டிருந்தானோ, தெரியவில்லை! அவ்வழியே வந்த பருன் அவனுடைய அந்த நிலைமையைக் கண்டான். உடனே அவனுடைய மிருக சுபாவம் விழித்துக் கொண்டது. குடிகாரன் குடியை நிறுத்தி விட்டான். ஆனால் குடிகெடுக்கும் குடிக் கடையை எதிரே கண்டதும் அவனுடைய நாக்கில் நீர் ஊறிற்று. அப்புறம் அவன் குடிப்பதற்கு எத்தனை நேரம் பிடிக்கப்போகிறது? அதுவும் தன்னைத் தடுத்து நிறுத்துபவர்கள் யாரும் அருகில் இல்லையென்றால் கேட்க வேண்டுமா? பருன் தன் தங்கச் செங்கோலைக் கையில் பிடித்து ஓங்கினான். 'முடிவு என்ன ஆகும்?' என்பதை முன் பின் யோசியாமல் தன் பலம் கொண்ட



ஒரு குரங்கு:—நம்மை யெல்லாம் பிடித்துக் கொன்று விடவேண்டும் என்று மைசூர் சட்டசபையிலே பேசி யிருக்கிறார்களாம்.

இன்னொரு குரங்கு:—நம்மிடம் மைசூர் ராஜாங்கம் வாலையாட்டினால் சுப்ரீம் கோர்ட் இருக்கவே இருக்கிறது. பயப்படாதே!

---

மட்டில் அவன் தலையில் ஓங்கி அடித்தான். காவலாளியின் தூக்கம் சிறிது நேரத்துக்குக் கலைந்தது. அடுத்த கணம் பூமியில் புரண்டு மரணத்துடன் ஐக்கியமாகிவிட்டது. காவலாளி மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டான்.

இப்பொழுது பருன் அதே பழைய பருன் ஆகிவிட்டான். அதே கனல் கக்கும் சுபாவம், அதே கல்லும் இரும்பும் கலந்த நெஞ்சு, அதே ஊரிம்மை - மனப்பான்மை எல்லாம் வந்து அவனை ஆட்கொண்டு விட்டன. தியூனஸின் மாளிகை அவனுக்குப் பிரேமபுரியாக இருந்தது. அங்கே அடி எடுத்து வைத்ததும் அவனுடைய அந்தத் தீய குணங்கள் எல்லாம் அடியோடு மாறி வந்தன. ஆனால் அந்த மாளிகையிலிருந்து வெளியே வந்து விட்டால் திரும்பவும் வேதாளம் முருங்க மரம் ஏறிய கதையாக அவை மாறிவிடும். தியூனஸ் மட்டும் அவனுடைய அன்புக்கு அன்பல் பதில் அளித்திருப்பாளானால் அவனுடைய அந்த சுபாவம் நிரந்தரமாகவே மாறியிருக்கும். ஆனால் அவ்வாறு நடக்காததால், தியூனஸின் மாளிகையைத் தாண்டி வந்து விட்டால் பருன் பழைய பருனாக மாறித் தன் மக்களிடம் பழி வாங்கி வந்தான். காதல் தீயைப் பாவத்தின் ஜ்வாலையைக்கொண்டு தணிக்க விரும்பினான் போலும்! (தொடரும்)

# நம்பிக்கை

வி. எஸ். ஆர்.

சபாரத்தினம் தம் தலைக்கு மேல் சுற்றிக் கொண்டிருந்த மின்சார விசிறியை அண்ணாந்து பார்த்தார். அவரது மனமும் ஓரே விஷயத்தைச் சுற்றிச் சுழன்று கொண்டுதானிருந்தது. எதிரில் மேஜை மீது வைக்கப் பட்டிருந்த கடிதம் 'பட பட' வென்று விசிறிக் காற்றில் அடித்துக் கொண்டது. அந்தக் கடிதத்தைப் பார்க்கப் பார்க்க அவர் உள்ளம் துடித்தது.

அவரது ஏக புத்திரன் சுப்புரத்தினம் அப்பாவிடம் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டுக் கிளம்பியவன் சென்னைப் பட்டணத்திலிருந்து ரொம்பவும் கோபமாக அந்தக் கடிதத்தை எழுதியிருந்தான்.

"மகா கனம் பொருந்திய தகப்பனார் அவர்கள் சமூகத்துக்கு......தாங்கள் மறு மணம் செய்து கொள்வதை ஆட்சேபிக்க நான் யார்? அதற்கு எனக்கு உரிமை ஏது? அது உங்கள் பிரத்யேக விஷயம். உங்களுக்குப் புத்தி சொல்ல நான் வயதானவனா?......உங்கள் சொத்து உங்கள் சுயார்ஜிதம்தான் என்பதை ஒப்புக் கொள்கிறேன். உங்கள் சாமர்த்தியத்தால் சம்பாதித்தது என்று நீங்கள் சொல்வதையும் ஆமோதிக்கிறேன். தங்கத்தைத் தாமிரமாகவும் தாமிரத்தைத் தங்கமாகவும் மாற்றும் சாமர்த்தியம் வேறு யாருக்கும் வராதுதான்......"

இந்தப் பாணியில் கோபமும் வெறுப்பும் தாண்டவமாடும் தொனியில் ஏதேதோ எழுதியிருந்தான். அவரது ஏக புதல்வனான சுப்புவிடம் அவருக்கு வாஞ்சை இல்லாமலில்லை. அவருக்கு வயது ஐம்பது ஆகியிருந்தது. நல்ல திடகாத்திர சரீரமுள்ளவர். அவர் மனைவி இறந்த பிறகு, பதினைந்து வருஷங்களாகத் தம் மறு விவாகத்தைப் பற்றி யோசித்திராத சபாரத்தினம் சிலகாலமாக அதைப் பற்றி யோசிக்கத் தொடங்கினார்.

இந்த மறு விவாக யோசனையைச் சுப்பு ஆட்சேபிக்க மாட்டான் என்று எதிர் பார்த்தார் சபாரத்தினம். ஆனால் அவனுக்குக் கொஞ்சம் கூடச் சம்மதமில்லை என்று தெரிந்ததும் அவருக்குக் கிலேசம் ஏற்படத் தொடங்கியது. தந்தைக்கும் மகனுக்கும் இருந்த அந்நியோந்நிய உறவில் பிளவு கண்டது. மகனின் அபிப்பிராயத்தைச் சட்டை செய்யாமல் பேச்சு வார்த்தைகள் நடத்த ஆரம்பித்தார் சபாரத்தினம். இந்தச் சமயத்தில்தான் சுப்பு தன் தந்தையை வெறுத்து வீட்டை விட்டுக் கிளம்பி, வெளியூரிலிருந்து அந்தக் கடிதம் எழுதியிருந்தான்.

எல்லாவற்றையும் விட அக் கடிதத்தில் தமது தொழில் முறையைப் பற்றிச் சுப்பு கேலியாக எழுதியிருந்ததுதான் 'சுருக்' கென்று அவர் உள்ளத்தில் தைத்தது. யுத்த காலத்தில் நாலைந்து வருஷங்களுக்குள் அவர் இருபது லட்சம் சேர்த்துவிட்டார். அவரது எதிரிகளில் பலர் அவர் தொழில் முறையைப் பற்றிக் கேவலமாகப் பேசுவார்கள். பித்தளையைத் தங்கமென்று விற்றும், தங்கத்தைப் பித்தளை யென்று சொல்லி வாங்கியும் கொள்ளைப் பணம் சம்பாதித்ததாக அவர்கள் சொல்வார்கள். இதைக் கேட்கும்போதெல்லாம் 'பொறாமைக்காரர்கள், அருவை பிடித்தவர்கள்' என்று உல்லங்கனம் செய்து தள்ளிவிடுவார் சபாரத்தினம். ஆனால் தமது ஏக புத்திரனான சுப்பு அவ்வாறு எழுதியது அவர் மனதை மிகவும் வாட்டியது.

யோசனையில் ஆழ்ந்திருந்த சபாரத்தினம் முன் பக்கத்தில் ஏதோ சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு வெளியே வந்தார். 'ஷோ ரூமில்' ஒரு வயதான அம்மாள் நின்று கொண்டு கையில் ஒரு மோதிரத்தைத் தூக்கிப் பிடித்த வண்ணம் "இந்த அசல் வைர மோதிரத்தைப் போலி வைரம் என்கிறீர்களே, உங்களுக்கு அடுக்குமா? ரூ. 250 கொடுத்து வாங்கினது ஐயா? சத்தியமாகச் சொல்கிறேன். நான் பொய் சொல்ல மாட்டேன்" என்றாள். அந்தப் பாட்டியின் உடம்பு ஆடியது. கண்களில் நீர் சுரந்தது.

சபாரத்தினத்தைப் பார்த்ததும் கடை ஆட்கள் அவரைச் சூழ்ந்து கொண்டனர். "இந்தப் பாட்டியம்மாள் மோதிரத்தை விற்கக் கொண்டு வந்திருக்கிறாள். நாங்கள் மோதிரத்தைப் பரீட்சை செய்து விட்டோம். இது நிஜ வைரமல்ல!" என்றனர்.

"இது வேடிக்கையாக இருக்கிறதே!" என்று திகைப்புடன் கூறிப் பாட்டியம்மாள் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டாள். அவள் குரல் துக்கத்தினாலும் வேதனையினாலும் கம்மி விட்டது.

சபாரத்தினம் அவள் முகத்தைப் பார்த்தார். அது நிஜ வைர மோதிரம் என்றே மனப் பூர்வமாக அவள் நம்பியிருப்பதை அவளுடைய களங்கமற்ற முகம் காட்டியது.

ஏழ்மையும் முதுமையும் அவள் முகத்திலுள்ள அசைவில் பிரதிபலித்தன. நெருப்பை மிதித்துவிட்டது போன்ற ஒரு வேதனை, எதையோ பறி கொடுத்து விட்டது போன்ற பதைபதைப்பு அவள் கண்களில் இருந்தது.

சபாரத்தினத்துக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை.

"அம்மா! இங்கே வாருங்கள்! இப்படி அந்த மோதிரத்தைக் கொடுங்கள், பார்க்கிறேன்" என்றார். அந்த அம்மாளும் மோதிரத்தைச் சபாரத்தினத்திடம் கொடுத்தாள். அவரும் அதை வாங்கி, கண்ணில் பூதக் கண்ணாடியை இடுக்கிக் கொண்டு சற்று நேரம் பார்த்தார்.

"அம்மா! உள்ளே ஒரு நிமிஷம் வர முடியுமா? உங்களிடம் பேச வேண்டும்" என்று கூறிப் பாட்டியைத் தம் அறைக்குள் அழைத்துப் போய் நாற்காலியில் உட்காரச் சொன்னார். "இது எப்படி உங்களுக்குக் கிடைத்தது? பேஷான வைரம் இது" என்று கேட்டார் சபாரத்தினம்.

"நல்லவேளை! நான் பிழைத்தேன்! அவர்கள் இதைப் போலி வைரம் என்றதும் எனக்கு ஒன்றுமே புரியவில்லை" என்று கூறிய வண்ணம் கிழவி ஆறுதலும் மகிழ்ச்சியும் குடி கொண்ட முகத்துடன் சபாரத்தினத்தைப் பார்த்து, "என்ன விலை கொடுப்பீர்கள்?" என்று கேட்டாள்.

"ஆமாம், இது எப்படி உங்கள் கைக்கு வந்தது என்று கேட்டேன், சொல்லவில்லையே!" என்றார் வைர வியாபாரி. கடைக்காரர் அனுதாபத்துடன் கேட்டதும், அந்த அம்மாளுக்குச் சொல்லவேண்டும் போலிருந்தது.

"அதுவா? இந்த வைர மோதிரம் ஒன்றுதான் என்னிடம் இப்பொழுது மிஞ்சியிருக்கும் சொத்து. இதை இருபது வருஷமாகக் கஷ்டப்பட்டுக் காப்பாற்றி வருகிறேன். என்ன நேர்ந்தாலும் இதை விற்கக் கூடாது என்று விரதம் செய்து கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுது விற்கும் அவசியம் வந்துவிட்டது" என்று ஆரம்பித்து காந்தம்மாள்—இதுதான் அந்தப் பாட்டியின் பெயர்—பின்வருமாறு கூறினாள்.

இளம் வயதிலேயே நான் தபால் இலாகாவிலுள்ள ஒரு உத்தியோகஸ்தருக்கு வாழ்க்கைப் பட்டேன். அப்பொழுது அவருக்குச் சம்பளம் அதிகமில்லை. புக்ககம் வந்த சில வருஷங்களுக்குப் பிறகு குழந்தை சங்கரன் பிறந்தான். என் கணவர் நாளடைவில் சம்பளம் உயர்ந்து பெரிய உத்தியோகத்தை அடைந்தார். பணமும் அந்தஸ்தும் அவர் மனதில் பெரிய மாறுதலை உண்டாக்கி விடவில்லை. எப்போதையும் விட என்னிடம் அன்பாக இருந்தார். "உன் அதிர்ஷ்டத்தால்தான் இந்த நல்ல நிலைமைக்கு வந்தேன்" என்று அடிக்கடி கூறுவார். சங்கரன் சிறு வயதிலிருந்தே சூடிகை. துறு துறு வென்றிருப்பான். அவனைப்பற்றி நாங்கள் பற்பல இன்பக் கனவுகள் கண்டு கொண்டிருந்தோம். பெரியவனாகிப் பெரு மகிழ்ச்சி அளிக்கப் போகிறான் என்று நம்பியிருந்தோம்.

அப்பொழுது எனக்கு முப்பது வயதிருக்கும். திடீரென்று எனக்குக் காச நோய் கண்டு படுத்த படுக்கையாகிவிட்டேன். என் கணவர் எவ்வளவோ வைத்தியம் செய்தார். ஆனால் என் நிலைமை வர வர மோசமாகி விட்டது. நான் என் கண்மணி சங்கரனின் கதியைப் பற்றி எண்ணிக் கண்ணீர் சொரி



வேன். நான் பிழைப்பது துர்லபம் என்று டாக்டர்கள் கூறி விட்டார்கள்.

அப்பொழுதுதான் என் வாழ்க்கையில் முக்கிய சம்பவம் நடந்தது. என் தங்கை சுபத்திரையும் அவள் பள்ளிக்கூட சிநேகிதி கமலாவும் என் படுக்கையருகில் இருந்து சிசுருஷை செய்வார்கள். கமலா அழகான பெண். பழகும் மனிதர்களுடன் ஒட்டிக் கொள்ளும் சுபாவம். சங்கரனிடம் அவள் உயிராக இருந்தாள். சங்கரனுக்கோ கமலாவைக் கண்டால் அலாதி ● உற்சாகம் பிறந்துவிடும். பிறகு வீட்டில் சிரிப்பும் கொம்மாளமும்தான்.

படுக்கையில் மூச்சுவிடத் திணறிக் கொண்டு என் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கும் நிலையில், சங்கரனின் எதிர்காலத்தைக் கருதி நான்தான் என் கணவரைக் கூப்பிட்டு, அந்த யோசனையைச் சொன்னேன்—அவர் கமலாவைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று. அவர் முதலில் சம்மதிக்கவில்லை. ஆனால் கமலாவின்



முதல் பையன் :— இன்றைக்குக் காலையில் எனக்கு ஒரு தம்பி பிறந்திருக்கான்டா, அது ஆண் குழந்தையா, பெண் குழந்தையா? சொல் பார்க்கலாம்!

இரண்டாம் பையன் :—ஆண் குழந்தைதான்!

முதல் பையன் :— சரிதான்! யாரோ உனக்குச் சொல்லிக் கொடுத்து விட்டார்கள்!

ஜீவன் ததும்பும் புன்னகைக்கு முன்னால் யார்தான் மயங்காமல் இருக்க முடியும்? கூடிய சீக்கிரம் இருவரும் தம்பதிகளாகும் வைபவத்தை நான் பார்த்தேன்.

ஆனால் விதியை யார் வெல்ல முடியும்? நான் எதிர்பார்த்த முடிவு எனக்குக் கிட்டவில்லை. கல்யாணமான சில மாதங்களுக்கெல்லாம் என் கணவர் பம்பாய்க்கு மாற்றப்பட்டார். போகுமுன் நான் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டேன். சங்கரனை ஒரு ஹாஸ்டலில் சேர்த்து விட்டுப் போனார். என் சகோதரன், அடிக்கடி குழந்தையை ஆஸ்பத்திரிக்கு அழைத்து வந்து காட்டுவான். என் குழந்தையைக் கமலா தன்னிடம் வைத்துக்கொள்ளவில்லை? எதற்காக அநாதையைப் போல் அவனை ஹாஸ்டலில் சேர்க்க வேண்டும்? இதுதான் எனக்குப் புரியவில்லை!

நாளாக ஆக என் உடம்பு குணமாகி, எழுந்து நடமாடும் நிலைக்கு வந்தேன். நானும் குழந்தையும் பம்பாய்க்குப் புறப்படும் நாளை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். ஆனால் என் கணவரிடமிருந்து வந்த பதில் என்னைத் திடுக்கிட வைத்தது. என் சகோதரன் வீட்டுக்குப் போய்க் கொஞ்ச காலம் ஓய்வெடுத்துக் கொள்ளும்படி கேட்டிருந்தார். எனக்கு அப்பொழுதே ஒரு சந்தேகம் உதித்தது—மீண்டும் கணவருடன் வாழும் சந்தர்ப்பம் நமக்குக் கிடைக்குமோ கிடைக்காதோ என்று எண்ணினேன்.

என் துரதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது? என் கணவருக்கு உடம்பு சுகமில்லை என்றும், உடனே என்னை அழைத்துக் கொண்டு புறப்பட்டு வரும்படியும் அண்ணாவுக்குத் தந்தி வந்தது. இப்பொழுது உள்ளதைப் போல் முன்பெல்லாம் ஆகாய விமானம் கிடையாதல்லவா? நாங்கள் பம்பாய் போய்ச் சேருவதற்குள், ஒரு பெண்ணுக்கு ஏற்படக் கூடிய பெரிய துர்ப்பாக்கியம் எனக்கு நேர்ந்துவிட்டதை அறிந்தேன். என் மாங்கல்யம் பறி போய்விட்டது.

என்னை ஆஸ்பத்திரியில் சேர்த்தபோது நான் போட்டுக் கொண்டிருந்த வைர நகைகளை என் கணவர் எடுத்துச் சென்றார். அவற்றையெல்லாம் கமலாவுக்குப் பூட்டி அழகு பார்க்க விரும்பியதில் தவறில்லையல்லவா? ஆகவேண்டிய காரியங்கள் ஒருவாறு முடிந்தபின் கணக்கு வழக்குகளைக் கவனிக்கவேண்டி வந்தது. கமலாவின் தகப்பனார் பம்பாயிலேயே இருந்தபடியால், விவகாரங்களில் அவர் கலந்து கொண்டார்.



கணக்குகளைப் பார்த்த போது பாங்கில் இருந்த மூவாயிரம் ரூபாயைத் தவிர வேறு எந்தச் சொத்துமே என் கணவர் விட்டுப் போகவில்லை என்று தெரிந்தது. என் கணவர் மிகவும் ஆடம்பரமாக வாழ்க்கை நடத்தி வந்ததாகவும், ஏராளமாகக் கடன் வாங்கிச் செலவு செய்ததாகவும் கமலா சொன்னாள். வைர நகைகளைப் பற்றிப் பேச்சு வந்தது. சில மாதங்களுக்கு முன்னால் நகைகளை விற்றுக் கடனுக்குக் கொடுக்கச் சொல்லி விட்டதாகச் சொன்னாள் கமலா.

எங்கள் கல்யாண தினத்திலிருந்து என் கணவர் கையில் போட்டுக் கொண்டிருந்த வைர மோதிரத்துக்கு மட்டும் ஆபத்து ஏற்படவில்லை. அது, என் தகப்பனார் என் கல்யாண முகூர்த்தத்தின்போது அவருக்குப் பரிசாக அளித்தது. கமலா அந்த மோதிரம் தனக்கு வேண்டும் என்று கேட்டாள். ஆனால், அதை விட்டுக் கொடுக்க எனக்கு எப்படி மனம் வரும்? பிடிவாதம் பிடித்து நான் அதை வாங்கிக் கொண்டேன். கணவர் ஞாபகமாக அது ஒன்றுதான் எனக்குக் கிடைத்தது. அதுதான் இந்த மோதிரம்!

இத்தனை வருஷங்களாக இந்த மோதிரத்தை உயிரைவிட அருமையாகப் பாராட்டி வருகிறேன். ஏழ்மை என்னை எவ்வளவோ சோதித்த போதிலும் இந்த மோதிரத்தை மட்டும் விற்க எனக்கு மனம் வரவில்லை. ஆனால் என் கஷ்ட காலத்தை என்னவென்று சொல்லுவது? இப்பொழுது விற்கும்படி வந்துவிட்டது!" என்று கூறினாள் காந்தம்மாள்.

கதையைக் கேட்ட சபாரத்தினம் "இப்பொழுது எதற்காக இந்த மோதிரத்தை விற்கவேண்டும்?—சங்கரனைப் பற்றி நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லையே?" என்று பரபரப்புடன் கேட்டார்.

"சங்கரனுக்காகத்தான் இதை விற்கிறேன். போன வருஷம் அவன் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் பண்ணி விட்டான். பல இடங்களில் வேலைக்கு முயற்சி செய்தும் கிடைக்கவில்லை. இப்பொழுது ஒரு கம்பெனியில் 250 ரூபாய் டெபாஸிட் கட்டினால் வேலை கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். பல இடங்களில் கேட்டுப் பார்த்தும் பணம் கிடைக்கவில்லை. ஆனால், இந்த சமயத்தில் உபயோகப்படாத மோதிரம் எதற்குத்தான் இருக்கிறது?" என்று கூறிப் பெருமூச்செறிந்தாள்.

"பாட்டி! டெபாஸிட் கட்டாத வேலை கிடைத்தால் நன்றாயிருக்குமல்லவா?" என்று கேட்டார் சபாரத்தினம்.

"ஆமாம். கிடைத்தால் நல்லதுதான். அப்படிக் கிடைத்தால் இந்த மோதிரத்தை விற்க வேண்டிய அவசியம் இல்லையாம். ஆனால் யார் வேலை கொடுக்கிறார்கள்......?"

இந்த சமயத்தில், அந்த அறைக்குள் வந்த வாலிபன், "அம்மா! சைனாபஜார் பூழுதும் தேடிக் கடைசியில் உன்னைக் கண்டுபிடித்து விட்டேன், பார்!" என்றான்.

"இவன்தான் சங்கரன்!" என்று அறிமுகம் செய்து வைத்தாள் பாட்டி.

"பலே கெட்டிக்காரனாக இருக்கிறானே! உங்களை அவன் தேடிக் கண்டுபிடித்தது ஆச்சரியம்தான்!" என்று கூறிச் சபாரத்தினம் அவனை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு, "பாட்டி! நீங்கள் மோதிரத்தை விற்க

















வேண்டியதில்லை. சங்கரனுக்கு வேலையும் கிடைத்து விட்டது" என்றார்.

பாட்டிக்கு அவர் சொல்லுவது புதிர் போடுவது போலிருந்தது. 'சங்கரனுக்காவது, வேலை கிடைக்கவாவது?' என்று மனதுக்குள் முணுமுணுத்துக் கொண்டாள். பிறகு, "உங்களுக்கு யார் சொன்னார்கள்?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"என் கம்பெனியிலேயே டெபாஸிட் இல்லாமல் சங்கரனுக்கு வேலை கொடுக்கிறேன். மோதிரத்தைப் பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள்!" என்று மோதிரத்தைக் கொடுத்தார் சபாரத்தினம். நடுங்கிய கைகளுடன் கண்களில் நீர் துளிர்க்க, காத்தம்மாள் மோதிரத்தை வாங்கிக் கொண்டாள்.

பாட்டி விடை பெற்றுக்கொண்டதும் சபாரத்தினம் சங்கரனைப் பார்த்து, "நம் வியாபாரத்துக்கே ஜீவாதாரமானது நம்பிக்கைதான். உன்னை நம்பி ஒரு சேதி சொல்கிறேன். உன் அம்மாவிடம் சொல்லக் கூடாது. விஷயம் என்னவென்றால் உன் தாயார் தன்னிடம் இருப்பது, உன் அப்பா போட்டுக்கொண்டிருந்த நிஜ வைர மோதிரம் என்றே மனப்பூர்வமாக நம்பிக் கொண்டிருக்கிறாள். அவள் நம்பிக்கையைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. வாஸ்தவத்தில் அது நிஜ வைரம் அல்ல. அது உன் தகப்பனார் போட்டுக்கொண்டிருந்த மோதிரமும் அல்ல. உன் சித்தியின் வேலைதான் என்பதில் சந்தேகமில்லை. உன் அப்பா போட்டுக் கொண்டிருந்த வைர மோதிரத்தை, தான் எடுத்துக்கொண்டு, அதற்குப் பதிலாக ஒரு போலி மோதிரத்தை உன் அம்மாவிடம் கொடுத்திருக்கிறாள். இதன் அமைப்பையும் தோற்றத்தையும் கண்டு உன் அம்மா அவள் சொன்னதை நம்பிவிட்டாள்.

"இந்த நம்பிக்கையுடன் அம்மா எப்பொழுதும் இருக்கட்டும். இந்த நம்பிக்கையைக் கெடுக்க எனக்கு இஷ்டமில்லை. நிஜத்தை ஒருநாளும் அம்மாவிடம் சொல்லிவிடாதே. உன் தகப்பனார் மறு விவாகம் செய்து கொண்டதில் என்ன பலன்? உனக்குக் கிடைத்த மோதிரம்கூடப் போலி மோதிரமாகப் போய்விட்டது. போகட்டும்...... உன்னை என் கம்பெனியில் இன்று முதல் பில் கலெக்டராகச் சேர்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் சபாரத்தினம்.

அன்றே, தாம் மறு விவாகம் செய்து கொள்ளப் போவதில்லை என்று சபாரத்தினம் சுப்புவுக்குக் கடிதம் எழுதி விட்டார்.

# விட்டது சனியன்!

ஆனந்த நீர்த்தன்

**கா**ப்பி டம்ளரை ராமமூர்த்தியின் மேஜை மீது வைத்துக் கொண்டே, "நேற்று சாயங்காலம் இந்திரா வீட்டிற்குப் போயிருந்தேன்" என்று ஏதோ பேச்சை ஆரம்பித்தாள் சரோஜா. டம்ளரைக் கையிலெடுத்துக் காப்பியைச் சுவைத்துக் கொண்டே, "என்ன விசேஷம்?" என்று கேட்கும் பாவனையில் அவள் முகத்தை ஏறிட்டு நோக்கினான் ராமமூர்த்தி.

"ஒன்றுமில்லை; அவள் ஒரு புதுத் தையல் மெஷின் வாங்கியிருக்கிறாள்; கால் மெஷின்தான்; மூந்நூற்றுச் சொச்சம் ரூபாயாம்! ரொம்ப நன்றாயிருக்கிறது!" என்று கூறித் தன் பேச்சு கணவன் முகத்தில் என்ன மாறுதலை உண்டாக்குகிறது என்று சரோஜா கவனித்தாள்.

ஆனால் அவன் முகத்தில் எந்த விதமான சலனமும் ஏற்பட்டதாகக் காணவில்லை.

"அதற்கென்னவாம், இப்பொழுது?"

"இல்லை; சும்மாச் சொன்னேன்!"

"நல்ல வேளை! எங்கே நாமும் அந்த மாதிரி ஒரு மெஷின் வாங்க வேண்டுமென்று சொல்லப் போகிறாயோ என்று பயந்து விட்டேன்!" என்று கூறி ஒரு பெருமூச்சு விட்டான் ராமமூர்த்தி.

"ஏன் பயப்பட வேண்டும்? நமக்கும் ஒரு மெஷின் இருந்தால் எவ்வளவோ சௌகரியம்தான். கோட்டும் சூட்டும் தைக்கத் தெரியாவிட்டாலும் உங்களுக்கு வேண்டிய பனியன், அண்டர்வேர், கர்ச்சீப்—எனக்கு ரவிக்கை, குழந்தைகளுக்குச் சட்டை இதெல்லாம் நானே தைத்து விடுவேன். அவ்வளவுக் கவ்வளவு தையல் கூலி மிச்சம்தானே?"

"போட்டாயே, ஒரே போடு! மெஷின் வாங்கினால் தையல் கூலி மிச்சமா? அப்படியானால் நான் ஒன்று சொல்லுகிறேன், கேள்!—மாதா மாதம் இந்த வீட்டிற்கு நாற்பது ரூபாய் ஏன் வாடகை கொடுக்க வேண்டும்? ஒரு வீடு வாங்கிவிட்டால் வாடகை மிச்சம். தினம் பஸ் சார்ஜ் ஒன்பது அணா ஏன் வெட்டிச் செலவு? ஒரு கார் வாங்கி விட்டால் அதுவும் மிச்சம். என்ன சொல்கிறாய்?" என்று அவளைக் கேலி செய்தான் ராமமூர்த்தி.

"சொல்ல மறந்து விட்டேனே! பூராப் பணமும் இப்போது கொடுக்க வேண்டியதில்லையாம். மாதா மாதம் இருபத்தைந்தோ, முப்பதோ கட்டினால் போதுமாம். இந்திராகூட அப்படித்தான் வாங்கியிருக்கிறாள். அந்தக் கம்பெனி மானேஜர் அவள் வீட்டுக்காரருக்கு ரொம்ப வேண்டியவராம். வேணுமானால் எனக்கும் அதே மாதிரி ஒரு மெஷின் வாங்கித் தருகிறேன் என்று சொன்னாள். அதனால்தான் சபலம் அடித்துக் கொள்கிறது!" என்று விவரித்தாள் சரோஜா.

"அது சரி, சரோஜா! ஆனால் இருபத்தைந்து ரூபாய் மாதா மாதம் நம்மால் கட்ட முடியுமா? இந்திராவின் வீட்டுக்காரருக்கு மாதம் பிறந்தால் கணை கணையாக நானூறு ரூபாய் வருகிறது. அவர் இருபத்தைந்தும் கட்டுவார்; முப்பத்தைந்தும் கட்டுவார். நமக்குத்தான் இங்கே பத்து தேதிக்கெல்லாம் கை வறண்டு போகிறதே! அவன் கடன் கொடுப்பானா, இவன் கடன் கொடுப்பானா என்று அல்லாடுகிறோமே? இந்த லக்ஷணத்தில் தையல் மெஷின் ஒன்றுதான் குறைச்சலா?" என்று சொல்லும்போதே, அவன் வார்த்தைகளில் உஷ்ணம் ஏறியது.

"உங்களுக்கு இஷ்டமில்லா விட்டால் எப்படி வேண்டுமானாலும் பேசுவீர்கள். போன மாதம் உங்கள் சிநேகிதர் மோட்டார் சைக்கிள் வாங்கிக் கொடுக்கிறேன் என்று சொன்னபோது ஒரே குதியாய்க் குதித்தீர்களோ இல்லையோ, வாங்கித்தான் தீருவேன் என்று! அப்போது மாதா மாதம் முப்பத்தைந்து ரூபாய் கட்டவும் தயாராயிருந்தீர்களே! நல்ல வேளையாக அப்புறம் சைக்கிள் 'இன்ஸ்டால்மெண்ட் பேஸிஸ்'லே கொடுக்க மாட்டேன் என்று சொல்லிவிட்டான். முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு பேசாமல் இருந்து விட்டீர்கள். அதை வாங்கியிருந்தீர்களானால் இப்போது முப்பத்தைந்து ரூபாய் கட்டத்தானே வேணும்? உங்களுக்கு என்றால் ஒரு நியாயம்; எனக்கு என்றால் இன்னொரு நியாயமா?" என்று படபடவென்று பொரிந்து தள்ளிவிட்டுக் கண்களைத் துடைத்துக்கொண்டே அறையை விட்டு வெளியே சென்று விட்டாள் சரோஜா.

* * *

**அ**ன்றிரவு படுப்பதற்காகச் சென்ற ராமமூர்த்தி கட்டிலில் உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்துவிட்டான். சரோஜா சொன்னது ஓரளவு உண்மைதான். மோட்டார்

சைக்கிள் வாங்கவும் மாதம் முப்பத்தைந்து ரூபாய் கட்டவும் அவன் தயாராகத்தானிருந்தான் முதலில். ஆனால் பிறகு அவனுக்கே அது தன் சக்திக்கு மீறியது என்று தோன்றியது. ஆகையால் மோட்டார் சைக்கிள் வாங்கும் யோசனையைக் கைவிட்டு விட்டான். சரோஜாவிடம் மாத்திரம் வீம்புக்கு 'இன்ஸ்டால்மெண்டு பேஸி'ஸுக்குக் கம்பெனிக்காரன் ஒப்புக் கொள்ளவில்லை யென்று சொல்லி விட்டான். இதுதான் வாஸ்தவத்தில் நடந்தது. ஆனால் இந்த உண்மையை அவன் இப்பொழுது எடுத்துச் சொன்னால் சரோஜா ஒப்புக் கொள்வாளா ஒருக்காலும் மாட்டாள். எனவே வீட்டில் அமைதி நிலவ வேண்டுமானால் தையல் மெஷினை வாங்கி விடுவதுதான் வழி என்று அவனுக்குப் பட்டது.

"சரோஜா!"

"வந்தேன்!"

இரண்டு நிமிஷங்கள் கழித்துக் கைவளையல்கள் குலுங்க, "ஏன் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்டுக்கொண்டே ஆவல் ததும்பும் முகத்தோடு கையில் பால் டம்ளருடன் உள்ளே நுழைந்தாள் சரோஜா.

"உனக்கு அவ்வளவு பிரியமாயிருந்தால் மெஷின் வாங்கிக் கொள். ஆனால் மாதம் இருபத்தைந்து ரூபாய்க்கு மேல் என்றால் கொடுக்க முடியாது. அதற்குச் சம்மதம் என்றால் நாளைக்கே போய் ஏற்பாடு செய்து கொள்!" என்றான்.

சரோஜாவின் முகம் மலர்ந்தது. அப்படியானால் நான் இந்திராவிடம் சொல்லி வரவழைத்து விடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே அவன் அருகில் உட்கார்ந்தான்.

## 2

"சரோஜா!"

......................

"சரோஜா!"

"இதோ வந்து விட்டேன்."

"கூப்பிடக் கூப்பிடப் பேசாமல் என்ன செய்து கொண்டிருந்தாய்?"

"மெஷினில் ரவிக்கை தைத்துக் கொண்டிருந்தேன். பாதியிலே விட்டுவிட்டு வர வேண்டாமென்று முழுக்கத் தைத்துவிட்டு வந்தேன். அதற்குள்ளே ஒன்பது தடவை கூப்பிட்டு விட்டீர்களே!"

"சீ, கழுதை! வாயை மூடு! எப்போது பார்த்தாலும் மெஷின்தானா? இது என்ன வீடா, தையற் கடையா? இதோ பார், மேஜைமேலே புஸ்தகங்களெல்லாம் எப்படிக் கிடக்கிறது? இவைகளை யெல்லாம் ஒழுங்காக அடுக்கி வைக்கப்படாது? இங்கே பார், இந்த அழுக்குத் துணி யெல்லாம் எவ்வளவு நாளாக இங்கே கிடந்து மிதிபடுகிறது? அவற்றை யெல்லாம் எடுத்துக் கட்டி வைக்கப்படாது? 'கிடக்கிறதெல்லாம் கிடக்கட்டும், கிழவியைத் தூக்கி மணைமேல் வை' என்கிற மாதிரி மெஷினை வைத்துக்கொண்டு மாரடித்துக் கொண்டிருந்தால் இதையெல்லாம் யார் கவனிப்பது?" என்று ஒரு பிரசங்கமே புரிந்து விட்டான் ராமமூர்த்தி.

சரோஜா பதிலே பேசாமல் தலை குனிந்து நின்றுவிட்டாள். அவள் கண்கள் நீரைக் கக்கத் தயாராய் இருந்தன. சமாளித்துக் கொண்டு அவனை நோக்கி, "இப்போது எதற்குக் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்டாள்.

அவள் கண்கள் கலங்கி ஓரிரு நீர்த் துளிகள் விழிக்கடையில் நிற்பதை அவன் பார்த்து விட்டான். அவ்வளவுதான்; வந்துவிட்டது ஆத்திரம் அவனுக்கு.

"அழுது மாய்மாலமா பண்ணுகிறாய்? உன்னை யார் என்ன சொல்லி விட்டார்கள், இப்போது?—போ, அந்தப் பக்கம். என் முன்னாலே நிற்காதே! இனிமேல் நான் வீட்டிலிருக்கும்போது அந்த மெஷினண்டை போனாயோ, கையை ஒடித்து

# எதற்கு மருந்து?



நோயாளி:— வயிற்றுப் பசிக்கு ஏதாவது மருந்து கொடுங்கள், ஸார்!

டாக்டர்:—பசி எடுப்பதற்குத்தான் நான் மருந்து கொடுத்தேனே?

நோயாளி:— அதுதான் தவறாகப் போய் விட்டது, டாக்டர்! பசிக்காமலிருப்பதற்கல்லவா நான் மருந்து கேட்டேன்?



விடுவேன் — ஆமாம்!" என்று ஆத்திரத்தோடு உறுமினான் அவன்.

சரோஜா தன் அறைக்குச் சென்று விழுந்து படுத்து வெகு நேரம் தேம்பித் தேம்பி அழுதாள். தன் கணவனிடம் இதுவரையில் அவள் இவ்வளவு கடுமையான வார்த்தைகளைக் கேட்டதே இல்லை. அன்றுதான் முதல் அனுபவம். நினைக்க நினைக்க நெஞ்சை என்னமோ செய்தது அவளுக்கு.

வெகு நேரமாயிற்று அவள் மனம் அன்று சமாதானமடைவதற்கு.

*    *    *

"**ப**ணம் தருகிறீர்களா?" என்று கேட்டாள் சரோஜா, ஆபீஸுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த ராமமூர்த்தியை.

"எதற்குப் பணம்?"

"பால்காரனுக்குக் கொடுக்க வேண்டாமா? சம்பளம் வந்தபோது பாதிப் பணம்தானே கொடுத்தோம்? இன்னும் பதினைந்து ரூபாய் பாக்கி நிற்கிறது."

"எல்லாம் அடுத்த மாதம் கொடுத்துக் கொள்ளலாம். இப்போது ஏது என்னிடம் பணம்?" என்று கூறிப் புறப்பட எத்தனித்தான் ராமமூர்த்தி.

"ஐயையோ, அவன் ஒப்புக்கொள்ள மாட்டானே! நேற்றைக்கே கேட்டு விட்டான். நல்லதனமாகச் சொல்லி இன்றைக்கோ, நாளைக்கோ வாங்கித் தருகிறதாகச் சொல்லியிருக்கிறேன்."

ராமமூர்த்திக்குக் கோபம் நெற்றிக்கேறியது.

"சீ, தரித்திரமே! சும்மாப் போட்டுத் தொளைக்காதே! போ, உன்னை! இப்போது என்னிடம் தம்பிடிகூடக் கிடையாது. மாதம் பிறந்ததும் உன் தையல் மெஷினுக்கு இருபத்தைந்து ரூபாய் அழுதாச்சே, ஜன்மாந்திரக் கடன்! பணம் எங்கிருந்து இருக்கும்? வேண்டாம், வேண்டாம் என்று முட்டிக் கொண்டேன். அன்றைக்குக் கேட்டாயா? ஒற்றைக் காலில் நின்று வாங்கத்தான் வாங்குவேன் என்று மெஷினை வாங்கித் தொலைத்தாய். இப்போது பால்காரனிடமும் தயிர்க்காரியிடமும் குட்டுப்பட வேண்டியது நான் தானே? உனக்கென்ன வந்தது? அவன் பணம் கேட்டான், இவள் பணம் கேட்டாள் என்று வந்து சொல்லி விடுகிறாய்! என்னிடம் பணம் இருக்கிறதா, இல்லையா என்கிறதைப் பற்றி நீ ஏன் கவலைப்படப் போகிறாய்? என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்ளத்தானே எனக்கு வந்து நீ வாய்த்திருக்கிறாய்!" என்று வாய்க்கு வந்தபடி அவளைத் திட்டிவிட்டு ஆபீஸுக்குச் சென்று விட்டான் ராமமூர்த்தி.

## 3

**அ**ன்று சரோஜா அழவில்லை. ராமமூர்த்தியின் இந்தக் கோபமும் வசவும் இப்பொழுது அவளுக்குச் சகஜமாகி விட்



ஆண் ஆந்தை :—கறி காய்கள் அதிகம் சாப்பிட்டால் பெண்கள் அதிக அழகு பெறுவார்களாம்; கனம் முன்ஷி சொல்லி யிருக்கிறார்!

பெண் ஆந்தை :—அப்படியானால் எல்லாக் கறிகாய்களையும் அந்த முன்ஷியின் அகமுடையாளையே சாப்பிடச் சொல்லுங்களேன்!

---

டன. எடுத்ததற்கெல்லாம் சன்னென்று விழுவது அவன் வழக்கமாகிவிட்டது. மளிகை சாமான் வாங்க வேண்டுமென்றாலும், ரேஷன் வாங்கவேண்டுமென்றாலும், காய் கறி வாங்க வேண்டுமென்றாலும்— இன்னும் எதற் கெடுத்தாலும் தையல் மெஷினைக் காரணம் காட்டித் தன்னிடம் பணம் இல்லை யென்று சண்டைக்கு வந்து விடுகிறான்.

போதும் போதாததற்கு ஒரு வாரத்திற்கு முன்பு அவர்கள் குழந்தை கஸ்தூரி, சரோஜா பார்க்காத சமயம் தையல் மெஷினில் விளையாடப்போய் ஊசி கையில் குத்தி ரத்தம் கொட்டி ஏக அமர்க்களமாகிவிட்டது. அன்று ராத்திரி விஷயம் தெரிந்ததும் ராமமூர்த்தி வீடே இடிந்து விழுந்து போகும்படி கூவினான்.

இதையெல்லாம் நினைத்துக் கொண்ட சரோஜாவின் இதய ஆழத்திலிருந்து நீண்ட பெருமூச்சு ஒன்று வெளிப்பட்டது.

* * *

அன்று ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்த ராமமூர்த்தி ஏதோ கவலையில் ஆழ்ந்தவனாகக் காணப்பட்டான். சரோஜா மெதுவாக அவனருகில் சென்று, "ஏன், என்னமோ போல் உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"ஒரு பெரிய வேலைக்கு அப்ளிகேஷன் போட்டிருந்தேன். வேலை இங்கே சென்னையில்தான். ஆனால் ஹெட் ஆபீஸ் டில்லியில் இருக்கிறது. இன்றைக்கு 'இண்டர்வ்யூ'க்கு ஆர்டர் வந்திருக்கிறது போனால் வேலை நிச்சயம். ஆனால் வெறுமனே டில்லிக்குப் போய்விட்டு வந்துவிட முடியுமா?—அதற்குத் தகுந்தாற்போல் 'டிரஸ்' வேணும். குறைந்தது நூற்றைம்பது அல்லது இருநூறு ரூபாய் இருந்தால் போய்விட்டு வந்துவிடலாம். ரூபாய்க்கு எங்கே போவது?"

"இருங்கள், வந்துவிட்டேன்!" என்று கூறி, சரோஜா எழுந்து சென்றாள்.

"நீ எழுந்து போகிற வேகத்தைப்பார்த்தால் எங்கிருந்தோ ரூபாய்தான் கொண்டு வந்து விடுவாய் போலிருக்கிறதே!" என்று கூறி ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்தான் ராமமூர்த்தி.

சரோஜாவும் புன்னகையுடனே அறையை விட்டு வெளியே சென்றாள்.

கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்த ராமமூர்த்தியை, "இந்தாருங்கள்!" என்று எழுப்பினாள் சரோஜா. கண்ணைத் திறந்து பார்த்த ராமமூர்த்தி ஆச்சரியத்தால் ஸ்தம்பித்துப் போனான்.

சரோஜா, புத்தம் புதிய இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களை அவன் முன்னால் நீட்டிக் கொண்டிருந்தாள்.

"ஏது சரோஜா, பணம்?" என்று ஆவலே வடிவாகக் கேட்டான் ராமமூர்த்தி.

"மெஷினை விற்று விட்டேன்!" என்றாள் சரோஜா அமைதியாக.

"ஆ! நிஜமாகவா?"

"பின்னே என்ன சொல்லுங்கள்? அது வந்த நாளாய் வீட்டிலே சந்தோஷம் என்பது கிடையாது; சண்டையும் கோபமும் கூச்சலுமாய் இருந்து கொண்டிருக்கிறது. அன்றைக்கே ஒருநாள் பாபு சாயபுவிடம் இருபதோ முப்பதோ தள்ளிக் கொடுக்கிறேன், வாங்கிக் கொள் என்று சொல்லியிருந்தேன். இன்றைக்குக் காலையிலே அவன் திடீரென்று வந்து, 'அம்மா, மெஷினைக் கொடுக்கிறீங்களா? ரூபாய் கொண்டு வந்திருக்கிறேன்' என்று சொன்னான். நாம் இதுவரைக்கும் இருநூறு ரூபாய் கட்டியிருக்கிறோம் இல்லையா?—அதைக் கொடுத்து விட்டான். பாக்கியை மாதா மாதம் அவன் கட்டி விடுவதாகச் சொல்லி யிருக்கிறான். விட்டது, சனியன்!—சமயத்துக்குப் பணமும் கிடைத்தது!" என்றாள் சரோஜா.

ராமமூர்த்தி ஆச்சரியத்துடன் நன்றி பொங்க அவளை ஏறிட்டு நோக்கினான். மெஷின் போய்விட்டதே என்ற ஏக்கமோ வருத்தமோ அவள் கண்களில் காணப்படவில்லை; நல்ல சமயத்தில் தன் கணவனுக்கு உதவினோம் என்ற சந்தோஷம் தான் அவற்றில் குடி கொண்டிருந்தன.



அழுக்குபடிந்த பந்து தீங்குவிளைவிக்காதது போலிருக்கிறது, ஆனால் உண்மையில்

# இந்த கைகள் *மறைந்திருக்கும் அபாயத்தை* தாங்குகின்றன!

—அழுக்கிலிருக்கும் கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளில் அபாயமிருக்கிறது.

**லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்**

# லைப்பாய் சோப்

*அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து உங்களைக்காப்பாற்றுகிறது!*




L. 138-50 TM

# பாலும் பாவையும்

## 7

> "நான் என்ன, பொன்னு பொருளா? — என்னை மீண்டும் என் பெற்றோர் ஏற்றுக் கொள்வதற்கு? — நான்தான் பெண்ணாச்சே!"
>
> —அகல்யா.

நீண்ட நேரம் அகல்யாவின் அழுகையைக் கனகலிங்கத்தால் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய் எழுந்து சென்று, தன் அறையின் விளக்கை அணைத்தான்.

கனகலிங்கம் விளக்கை அணைத்ததும் அகல்யாவுக்குப் 'பகீர்' என்றது. தன்னுடைய அழுகையைப் பொருட்படுத்தாமல் அவன் எங்கே படுத்துக்கொண்டு விடப் போகிறானோ என்று அவள் பயந்தாள்!

நல்ல வேளையாக அப்படியெல்லாம் ஒன்றும் நேரவில்லை; கனகலிங்கம் மெள்ள அடிமேல் அடி எடுத்து வைத்து அவளுடைய அறைக்குச் சென்றான். அவனைக் கண்டதும் தன் மடியின் மேலிருந்த தலையணையைத் தூக்கித் தூர எறிந்துவிட்டு அவள் எழுந்து நின்றாள்.

கனகலிங்கம் சிரமப்பட்டுச் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு, "கோபத்திலும் மரியாதையை மறக்கவில்லை போலிருக்கிறதே!" என்றான்.

பதில் இல்லை.

"ஒருவேளை நீ எழுந்து நின்றதும் கோபத்தின் அறிகுறிதானோ?"

பதில் இல்லை.

"எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது; அதையாவது சொல்லட்டுமா?"

பதில் இல்லை.

"சரி; அப்படியானால் நான் வருகிறேன்!" என்று சொல்லிவிட்டுக் கனகலிங்கம் அவளைக் கடைக் கண்ணால் நோக்கிக் கொண்டே தன் அறைக்குத் திரும்பினான்.

அவன் எதிர்பார்த்தது நடந்தது; அகல்யா மௌனத்தைக் கலைத்தாள்!

ஆம், அவளுடைய உள்ளத்தை ஏதோ ஒரு சபலம் உந்தித் தள்ளவே, அதுவரை அசையாமலிருந்த அவள் அசைந்தாள். அது மட்டுமல்ல; நின்ற நிலையிலிருந்து ஓர் அடி எடுத்து முன்னால் வைத்து, "என்ன யோசனை?—சொல்லிவிட்டுப் போங்கள்!" என்றும் சொன்னாள்.

பாவம், அந்த நிலையிலும் அவளுடைய முகம் எதையோ எதிர்பார்த்து மலர்ந்து தொலைத்தது!

கனகலிங்கம் வெற்றிப் புன்னகையுடன் திரும்பி, "அந்த இந்திரன் எழுதிய கடிதம் உன்னிடம் இருக்கிறதா?" என்று கேட்டான், கண்களை உயர்த்தி நெற்றியைச் சுருக்கிக்கொண்டே.

இந்த ரஸமற்ற கேள்வியைக் கேட்டதும் அவள் முகம் குவிந்தது. இருந்தாலும், "ஏன்?" என்று ஏமாற்றத்துடன் கேட்டு வைத்தாள்.

"அந்தக் கடிதத்தைக் கொண்டு நான் அவன்மீது போலீஸ் நடவடிக்கை எடுக்கலாமென்று நினைக்கிறேன்......"

"போலீஸ் நடவடிக்கை எதற்காம்?"

"அவனுடைய கடமையை அவனுக்கு உணர்த்துவதற்கு!"

"நான் கடமையை விரும்பவில்லையே; காதலைத்தானே விரும்புகிறேன்......?"

"காதல், காதல் என்று கிளிப்பிள்ளை போல் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருப்பதில் என்ன பிரயோஜனம்?—உலகத்தில் காதலை விடக் கடமைதான் மிகவும் சக்தி யுடையதாயிருக்கிறது......"

"இருக்கலாம்; ஆனால் அந்தக் கடமையைப் போலீஸின் உதவியைக் கொண்டு உணர்த்த நான் தயாராயில்லை."

"சொல்வதைக் கேள்; அதனால் உன்னுடைய வாழ்க்கை மீண்டும் மலரும்......"

"மலராது; மானம் போகும்!"

"போகிற மானம் ஒரே ஒருவனுக்காக எவ்வளவு வேண்டுமானாலும் போகலாம்—சமூகமும் அதை அனுமதிக்கும்......"

"சமூகத்தைப் பற்றி எனக்குக் கவலையில்லை......"

"உனக்குக் கவலையில்லாமலிருக்கலாம்; எனக்குக் கவலையாயிருக்கிறதே!"

"அதற்காக நான் என்ன செய்வதாம்?"

"நீ ஒன்றும் செய்யவேண்டாம்; அந்தக் கடிதத்தை என்னிடம் கொடுத்தால் போதும்."

"நான் அதைக் கிழித்து எறிந்து விட்டேன்......!"

கனகலிங்கத்தின் வெற்றிப் புன்னகை இதைக் கேட்டதும் தோல்விப் புன்னகையாக மாறியது. 'ஆம், அந்தக் கடிதத்தைக் கிழித்து எறிந்துவிட்டதாக அவள் ஏற்கெனவே நம்மிடம் சொல்லியிருந்தாளே!' என்று தனக்குத் தானே அவன் முணுமுணுத்துக் கொண்டான்.

அவனுடைய மனம் மீண்டும் அமைதியை இழந்து தவித்தது. ஒன்றும் புரியாமல் தன் முகவாய்க் கட்டையைத் தடவிக்கொண்டே அவன் நின்றது நின்றபடி நின்றான்.

திடீரென்று இன்னொரு யோசனை தோன்றிற்று அவனுக்கு. மறுபடியும் அவன் அகல்யாவை நோக்கி, "உனக்கு அவனுடைய விலாசம் தெரியுமா?" என்று கேட்டான்.

"எதற்கு?" என்று கேட்டாள் அவள்.

"அவனுடைய பெற்றோரிடம் உன்னைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு!"

அகல்யா சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறாய்?" என்று கேட்டான் கனகலிங்கம்.

"பிள்ளையே என்னுடன் சேர்ந்து வாழ விரும்பாதபோது, பெற்றோர் சேர்ந்து வாழ எப்படி விரும்புவார்கள்?"

"ஏன், நீதியையும் நேர்மையையும் அவர்களிடம் எதிர்பார்க்க முடியாதா?"

"முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. ஏனெனில், அவர்கள் பணக்காரர்கள்......!"

"பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருந்துமா அந்தப் பாவி உன்னிடம் பணத்தை எதிர்பார்த்தான்?"

"ஆமாம்; ஏழையைவிடப் பணக்காரனுக்குத்தானே பணத்தின் மீது ஆசை அதிகமாயிருக்கிறது!" என்றாள் அகல்யா.

கனகலிங்கம் ஒரு கணம் மௌனமாக இருந்தான். மறு கணம், "நீ சொல்வது ஒரு விதத்தில் உண்மைதான்!" என்றான்.

அவனுடைய மூளை குழம்பிற்று. ஒன்றும் புரியாமல் தலையைச் சொறிந்து கொண்டே திரும்பினான்.

"எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டுவிட்டு, 'ஏன் கேட்டோம்?' என்று தெரியாமல் விழித்தாள் அவள்.

"எங்குமில்லை; இதோ வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே, அந்த அறையை விட்டு வெளியே போவதற்காக அவன் கதவைத் திறந்தான்.

அவ்வளவுதான்; அங்கிருந்து யாரோ ஒருவன் 'தடதட' வென்று விழுந்தடித்துக் கொண்டு ஓடும் சத்தம் கேட்டது!

கனகலிங்கத்துக்கு ஒரு கணம் ஒன்றும் தோன்றவில்லை; அவன் திக்பிரமை பிடித்தவன்போல் அசைவற்று நின்றான்.

மறுகணம், "திருடன், திருடன்!" என்று கத்தவேண்டும்போல் தோன்றியது அவனுக்கு—ஆனால் என்ன பிரயோஜனம் அதனால்?-அனாவசியமாகக் கூட்டம் சேரும்; ஆளுக்கொரு கேள்வியைக் கேட்டுத் திக்கு முக்காட வைப்பார்கள்!—அதற்கு மேல் கனகலிங்கம் யோசிக்கவில்லை; அவனைத் தொடர்ந்து ஓடினான்!

ஆனால், ஓயாமல் பிடிவாதம் பிடிக்கும் செல்லப் பிள்ளையைப் போல 'சோ'வென்று பெய்து கொண்டிருந்த சித்திரை மாதத்துச் செல்வ மழை, ஹோட்டல் வாசலைக் கடந்து அவனை வெளியே ஓட விடவில்லை. அவன் நின்றான்; நின்றே விட்டான்!

அந்த ஆசாமியோ காற்றையும் மழையையும் பொருட்படுத்தாமல் தெருவோடு ஓடினான், ஓடினான், ஓடிக்கொண்டே இருந்தான்!

அவனுடைய தலை மறைந்ததும், 'நமக்கு ஏதோ ஆபத்து நேரப் போகிறது!' என்று தனக்குள் முணுமுணுத்துக்கொண்டே கனகலிங்கம் திரும்பினான்.

"என்ன!—என்ன நடந்தது?—என்ன!" என்று பரபரப்புடன் கேட்டுக்கொண்டே அவனுக்கு எதிரே வந்தாள் அகல்யா.

கனகலிங்கம் தன்னைப் போல் அவளும் பயப்படவேண்டாம் என்று கருதித் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "ஒன்றுமில்லை; யாரோ ஒரு திருட்டுப் பயல் இங்கே வந்து நின்று, நாம் பேசியதை ஒட்டுக் கேட்டுக்கொண்டிருந்திருக்கிறான். என்னைக் கண்டதும் அவன் ஓடி விட்டான்!" என்றான்.




"திருட்டுப் பயலா!—இங்கே திருடுவதற்கு என்ன இருக்கிறது?" என்று கேட்டாள் அகல்யா.

கனகலிங்கம், "ஏன், நீ இல்லையா!" என்றான் சிரித்துக் கொண்டே.

"என்னைத்தான் ஏற்கெனவே ஒருவன் திருடிக்கொண்டு வந்து இங்கே விட்டு விட்டுப் போய் விட்டானே!" என்று சொல்லிவிட்டு, அகல்யா நெட்டுயிர்த்தாள்.

கனகலிங்கத்துக்கு இதைக் கேட்டதும் வேறொரு யோசனை தோன்றிற்று. "அப்படியானால் எங்கிருந்து திருடிக்கொண்டு வந்தானோ, அங்கே கொண்டுபோய் உன்னை நான் விட்டுவிடட்டுமா?" என்றான் அவன்.

"நான் என்ன, பொன்னா பொருளா?— என்னை மீண்டும் என் பெற்றோர் ஏற்றுக் கொள்வதற்கு? — நான்தான் பெண்ணாச்சே!" என்றாள் அவள்.

கனகலிங்கம் விழித்தான். விழித்து விட்டு, "உண்மைதான்; பொன்னுக்கும் பொருளுக்கும் உள்ள மதிப்பு இந்தக் காலத்தில் பெண்ணுக்கு — ஏன், அவளுடைய கற்புக்குக்கூட — இருப்பதில்லைதான்!" என்றான்.

இருவரும் பின்னால் கை கட்டியபடி மௌனமாக இரண்டு அடிகள் எடுத்து வைத்தார்கள்.

அகல்யா இருந்தாற்போலிருந்து எதையோ நினைத்துக்கொண்டு, "ஆமாம்; ஹோட்டல்காரர் வாசற் கதவைப் பூட்டிக்கொண்டு தானே வீட்டுக்குச் சென்றிருக்கிறார்?— திருடன் எப்படி உள்ளே நுழைந்தான்?" என்று கேட்டாள்.

"நீ கவனிக்கவில்லை போலிருக்கிறது; மாடிப் படிகள் சாலையைப் பார்த்தாற்போல் இருக்கின்றன ......"

"மேலே உள்ள மாடிக் கதவைச் சாத்தி நீங்கள் தாளிடவில்லையா?"

"இல்லை; மறந்துவிட்டேன்!"

"நல்ல வேலை செய்தீர்கள்; முதலில் மாடிக் கதவைச் சாத்தித் தாளிடுங்கள்!"

கனகலிங்கம் மாடிக் கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டுத் தன் அறையை அடைந்தான். அதற்குமேல் அவனைத் தொந்தரவு செய்ய விரும்பாமல் அகல்யா குழம்பிய மனதுடன் தன் அறையை அடைந்தாள்.

* * *

அன்றிரவு தூக்கம் ஒதுங்கி நின்று அவர்கள் இருவரையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. 'வந்தவன் யாராயிருக்கும்?' என்ற கேள்வியைப் போட்டுக் கொண்டு இருவரும் விடை தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தனர். ஏழைகளின் வேதனையைக் கண்டு இரங்காத உலகத்தைப் போல அன்று தூக்கமும் கடைசிவரை அவர்களுக்காக இரங்கவேயில்லை.

மறுநாள் வழக்கம்போல் பொழுது விடிந்தது. ஆனால் கனகலிங்கத்தின் கவலை விடியவில்லை; அகல்யாவின் துயரமும் விடியவில்லை.

'வந்தவன் யாராயிருந்தால் என்ன?— வருகிற ஆபத்து வழியில் நிற்கப் போவதில்லை' என்று துணிந்து கனகலிங்கம் படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தான்; அதேசமயம் அகல்யாவும் துணிந்து எழுந்து உட்கார்ந்தாள்.

மழை விடாமல் பெய்துகொண்டிருந்ததால் கனகலிங்கம் அன்று விழாவுக்குச் செல்லவில்லை. விழாவுக்காகப் போடப்பட்டிருந்த கொட்டகைக்குள் சென்று கடை வைக்கவும் அவனுக்கு அனுமதி கிடையாது. காரணம், தமிழை வளர்ப்பதில் ஆர்வங் கொண்டிருந்த விழாக்காரர்கள் பணத்தை வளர்ப்பதிலும் ஆர்வங் கொண்டிருந்ததுதான்!

எனவே, தெளிவற்ற சிந்தனைகள் பலவற்றுக்கு ஆளாகி அவன் நேரம் போவதே தெரியாமல் உட்கார்ந்திருந்தான்.

பகல் ஒரு மணி இருக்கும். ஹோட்டல் 'ஸர்வர்' ஒருவன் அகல்யாவின் அறைக்குள் நுழைந்து, "நேரமாகிறதே; நீங்கள் சாப்பிட வரவில்லையா?" என்று கேட்டான்.

"இல்லை; எனக்கு இன்று உடம்பை என்னவோ செய்கிறது!" என்றாள் அகல்யா.

"சரி" என்று சொல்லிவிட்டு, அந்த 'ஸர்வர்' கனகலிங்கத்தின் அறைக்கு வந்தான்.

கனகலிங்கம் அவனை நோக்கி, "இன்று நானும் இங்கே சாப்பிடப் போவதில்லை. ஏனெனில் இந்த ஊர் நண்பர் ஒருவர் என்னை விருந்துக்கு அழைத்திருக்கிறார்; அவருடைய வீட்டுக்கு நான் சாப்பிடப் போகவேண்டும்" என்றான்.

'ஸர்வர்' கீழே இறங்கிச் சென்றதும், "எந்த ஊர் நண்பர் உங்களை விருந்துக்கு அழைத்திருக்கிறார்?" என்று கேட்டுக் கொண்டே அகல்யா, கனகலிங்கத்தின் அறைக்குள் நுழைந்தாள்.

"இந்த ஊர் நண்பர்தான்!" என்றான் கனகலிங்கம்.

"நிஜமாகவா சொல்கிறீர்கள்?"

"ஆமாம்."

"பொய்; நான் இதை நம்பவே மாட்டேன்!" என்று அகல்யா சொன்னாள்.

"நீ சொன்னது மட்டும் உண்மையோ?"

"இல்லை; பொய்தான்!"

"அப்படியானால் நான் இதை நம்புகிறேன்!" என்று கனகலிங்கம் சொன்னான்.

"உண்மையை நம்பாவிட்டாலும் பொய்யையாவது நம்புகிறீர்களே!—ரொம்ப சந்தோஷம்!" என்றாள் அகல்யா.

"எது உண்மை?" என்று கேட்டான் கனகலிங்கம்.

அகல்யா சந்தர்ப்பத்தை நழுவ விடாமல், "நான் உங்களைக் காதலிப்பதுதான்!" என்று மீண்டும் ஒருமுறை சொல்லி வைத்தாள்.

கனகலிங்கம், "காதலிப்பது உண்மையாயிருக்கலாம். ஆனால் அதற்குக் காசு வேண்டுமென்று நான் உன்னிடம் ஏற்கெனவே சொல்லவில்லையா?" என்றான்.

"காதலுக்கும் காசுக்கும் சம்பந்தமேயில்லை. அது வேறு, இது வேறு என்று நானும் உங்களிடம் ஏற்கெனவே சொல்லவில்லையா?"

கனகலிங்கம் சிரித்தான். சிரித்துவிட்டு, "காசில்லாமல் காதலிக்க முடியாது என்பதை ஒருவன் உனக்கு அனுபவ பூர்வமாக உணர்த்தியிருந்தும் நீ இப்படிப் பேசுவது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது!" என்றான்.

"அதைவிட ஆச்சரியம் நீங்கள் அடிக்கடி உங்களோடு அவனை ஒப்பிட்டுப் பேசுவதுதான்!" என்றாள் அகல்யா.

கனகலிங்கம் பேசாமலிருந்தான்.

"எனக்குத் தெரிந்தவரை என்னை நீங்கள் காதலிக்க மாட்டேன் என்று சொல்வதற்கு ஒரே ஒரு காரணந்தான் இருக்கிறது!" என்று அகல்யா மீண்டும் பேச்சை ஆரம்பித்து வைத்தாள்.

"என்ன காரணம்?" என்று கனகலிங்கம் கேட்டான்.

"சொல்லட்டுமா?"

"சொல்லு!"

"சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே...?"

"மாட்டேன்!"

"நான் ஏற்கெனவே ஒருவனால் கெடுக்கப் பட்டவள் என்பதுதான் அந்தக் காரணம்!"

"இல்லை; இல்லவே யில்லை!" என்று கனகலிங்கம் சாதித்தான்.

"கதை; வெறும் கதை!" என்று அகல்யாவும் அவனுக்குச் சளைக்காமல் சாதித்தாள்.

கனகலிங்கம் பேசாமலிருந்தான்.

சிறிது நேரம் மௌனமாக இருந்த பிறகு, "காந்திஜியின் தத்துவத்தில் உங்களுக்கு நம்பிக்கை யுண்டா?" என்று கேட்டு, மறுபடியும் பேச்சை மாற்றினாள் அகல்யா.

"உண்டு" என்றான் கனகலிங்கம்.

"வகுப்பு வெறியின் காரணமாகக் கற்பழிக்கப்பட்ட பெண்களை அவர்களுடைய கணவன்மார்கள் மீண்டும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று அவர் சொல்லவில்லையா?"

"சொன்னார்!"

"அதே மாதிரி நானும் ஏதோ ஒரு வெறியால் கற்பழிக்கப் பட்டவள்தானே?—என்னை நீங்கள் ஏன் ஏற்றுக்கொள்ளக் கூடாது?"

"அவர்களுக்கும் உனக்கும் வித்தியாசம் இருக்கிறது......"

"என்ன வித்தியாசம்?"

"தங்களுடைய விருப்பத்துக்கு விரோதமாக அவர்கள் கற்பழிக்கப்பட்டார்கள்; நீ அவ்வாறு கற்பழிக்கப்படவில்லை!"

அகல்யாவுக்கு இது என்னவோ போலிருந்தது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, "நான் உங்களைக் கடைசியாகக் கேட்கிறேன்—நீங்கள் என்னை ஏற்றுக் கொள்ளவே மாட்டீர்களா?" என்று அவள் தன்னுடைய கடைசி ஆயுதமான கண்ணீரை மறுபடியும் விட்டுக்கொண்டே கேட்டாள்.

கனகலிங்கம் பேசாமலிருந்தான்.

"ஏன் ஒன்றும் சொல்லாமலிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் அகல்யா.






"என்ன சொல்லவேண்டும் என்கிறாய்?"

"உங்களுடைய வாயைத் திறந்து, 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று ஒரு வார்த்தை—ஒரே ஒரு வார்த்தை—சொல்லி விடுங்கள்; போதும்!"

"சொல்லாவிட்டால்......?"

"நான் ஏதாவது ஒரு முடிவுக்கு வந்து விடுவேன்."

"என்ன முடிவுக்கு வருவாய்?"

"என்னைப்போல் வழி தவறியவர்களுக்கு வேறு எதில் முடிவு இருக்கிறது?—சாவில் தான்!" என்றாள் அகல்யா.

கனகலிங்கம் யோசனையில் ஆழ்ந்தான். அவன்மேல் ஒன்றன் பின் ஒன்றாக அகல்யாவின் கண்ணீர்த் துளிகள் விழுந்து தெறித்தன.

அகல்யா முந்தானையின் முனையைப் பிடித்து முறுக்கிக்கொண்டே அவனை உற்றுப் பார்த்தாள். ஒரு நிமிஷம், இரண்டு நிமிஷம், மூன்று நிமிஷம், நான்கு நிமிஷம்...

அவளால் பொறுக்க முடியவில்லை. கண்ணீரைத் துடைத்துக்கொண்டே, "என்ன யோசிக்கிறீர்கள்?" என்று பதட்டத்துடன் கேட்டாள்.

கனகலிங்கம் விரக்தியுடன் சிரித்தான். சிரித்துவிட்டு, "உன்னைக் காதலிக்கலாமா, வேண்டாமா என்றுதான் யோசிக்கிறேன்!" என்றான்.

"யோசியுங்கள்; நன்றாக யோசியுங்கள்!—காதலிப்பதற்குக்கூட யோசிக்கும் ஒரு புண்ணியாத்மாவை நான் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. எனக்குத் தெரிந்தவரை உலகத்திலேயே நீங்கள்தான் முதன் முறையாகக் காதலிப்பதற்கு யோசிக்கிறீர்கள் என்று நினைக்கிறேன்—எனவே, யோசியுங்கள்; நன்றாக யோசியுங்கள்!—யோசித்துக் கூடிய சீக்கிரத்திலேயே தயவு செய்து உங்களுடைய முடிவை எனக்குத் தெரிவித்து விடுங்கள்!" என்று அகல்யா வயிற்றில் எரிச்சலுடனும், நெஞ்சில் உறுதியுடனும் சொல்லி விட்டுத் தலை நிமிர்ந்தாள்.

கனகலிங்கம் அவளை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு, "ஆனால் ஒன்று..." என்று அவன் ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

அகல்யா குறுக்கிட்டு, "என்ன...?" என்று கேட்டாள்.

"சொல்லட்டுமா ......?"

"தாராளமாய்ச் சொல்லுங்கள்!"

"நான் உன்னைக் காதலிக்காமல் கொல்வதைவிடக் காதலித்தே கொன்றுவிடலாம் என்று நினைக்கிறேன்!"

அவள் சிரித்தாள்; அவனும் சிரித்தான்.

"இதற்கு நீ என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான் கனகலிங்கம்.

அகல்யா அவன் சொன்னவற்றைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல், "உங்கள் சித்தம்; என் பாக்கியம்" என்று சொல்லி, அவனை வணங்கினாள்.

அன்றிரவு இருவருக்கும் சாப்பாடு மட்டுமல்ல; தூக்கமும் பிடித்தது.

## 8

மூன்றாம் நாள் காலை விழா முடியா விட்டால் ஜனங்களே அதை முடித்து விடுவார்கள் போலிருந்தது. அவ்வளவு சிரமத்தை அவர்களுக்குக் கொடுக்க விழாக்காரர்கள் விரும்பவில்லை; தாங்களாகவே முடித்து விட்டார்கள். ஆனால், 'ஏதோ கூடினோம், கலைந்தோம்' என்று இருக்க வேண்டாமென்று அவர்கள் பலனை எதிர்பாராமல் ஆயிரத்தோரு தீர்மானங்களை அமோகமாக நிறைவேற்றி வைத்துவிட்டுத் தங்கள் தங்களுடைய ஊருக்குக் கிளம்பினார்கள்.

கனகலிங்கமும் கடையைக் கட்டிக் கொண்டு ஹோட்டலுக்கு வந்தான். வந்ததும் வராததுமாகப் புத்தகங்களையெல்லாம் சேர்த்து ஒரு கட்டாகக் கட்டிப் பழையபடி ரயில்வே 'பார்ச'லில் சென்னைக்கு அனுப்பி வைத்து விட்டுத் திரும்பினான்.

மத்தியானம் சாப்பிட்டு முடிந்ததும், "இன்றிரவுதானே ஊருக்குக் கிளம்பப் போகிறீர்கள்?" என்று அகல்யா கனகலிங்கத்தை நோக்கிக் கேட்டாள்.

"ஆமாம்; நீ தயாராகி விட்டாயா?" என்றான் கனகலிங்கம்.

"நேற்றிரவே நான் தயாராகி விட்டேனே!" என்றாள் அகல்யா உற்சாகத்துடன்.

"மீன் குஞ்சுக்கு நீந்தக் கற்றுக் கொடுக்க வேண்டுமா, என்ன?" என்றான் கனகலிங்கம்.

"போதும், வாயை மூடிக் கொண்டிருங்கள்!—நான் மீன் குஞ்சுமில்லை; நீங்கள் எனக்காக ஒற்றைக் காலில் நின்று தவம் செய்யும் கொக்குமில்லை!" என்றாள் அகல்யா.

"இதோ மூடிக் கொண்டேன்!" என்று கனகலிங்கம் தன் வாயை இரு கைகளாலும் பொத்திக் கொண்டு, அவளைப் பார்க்காமல் பார்த்தான்.

அவனுடைய கைகளை அவள் விலக்கி விட்டுவிட்டு, "நேற்றிரவு நான் ஒரு கனவு கண்டேனே......!" என்றாள் குறுநகை பூத்துக் கொண்டே.

"என்ன கனவு......?"

"மாலை நேரம். மலை தன் பயங்கரமான வாயைப் பிளந்து சூரியனைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கிக் கொண்டிருக்கிறது. நான் அந்தக் காட்சியை அனுபவித்த வண்ணம் ஒரு தாமரைக் குளக் கரையில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன்......"

"இந்திரனை நினைத்துக் கொண்டா?"

"இல்லை; உங்களை நினைத்துக் கொண்டு!"

"அதாவது, சூரியன்மீது தான் கொண்ட நிறைவேறாத காதலை எண்ணி எண்ணித் தாமரை மலர் நெஞ்சுருகி நிற்பதுபோல நீயும் நின்று கொண்டிருந்தாயாக்கும்?"

"நின்று கொண்டிருக்கவில்லை; உட்கார்ந்துகொண்டிருந்தேன்!"

"சரி, அப்புறம்.....?"

"கன்னங் கரேலென்று இருள் கவிந்து கொண்டு வருகிறது; செக்கச் செவேலென்று எனக்கு எதிரே ஒரு தாமரை மலர் இருக்கிறது; அந்தத் தாமரைக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு வண்டு உல்லாசமாகச் சீட்டி அடித்துக் கொண்டே சுழன்று சுழன்று பறந்து வருகிறது............"

"தாமரை மலரை நோக்கியா......?"

"இல்லை; கரையோரத்தில் பூத்துக் குலுங்க இரவை நோக்கிக் காத்திருக்கும் பவள மல்லிகையை நோக்கி அந்த வண்டு வருகிறது......"

"தாமரை அதை எதிர்பார்த்து ஏமாந்து விட்டதாக்கும்?"

"ஆமாம்—ஆயினும் ஆசை விடவில்லை. 'ஏ, வண்டே! அமைதியான இரவின் இன்பத்தை நீ அனுபவிக்க வேண்டாமா? ஏன் வீணாக அலைந்து கொண்டிருக்கிறாய்?—வா; சீக்கிரம் வா! இன்னும் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் நான் என்னுடைய அழகுறும் வாயை மூடிக்கொண்டு விடுவேன். அதற்குள் நீ வந்து அமுதுண்டுப் பசியாறி, என் மகரந்தப் பொடி மஞ்சத்தின் மீது அலுப்புத் தீரப் படுத்துக் கொண்டு விடு!—விடிந்ததும் நான் வாயைத் திறப்பேன்; நீ போய்விடலாம்' என்று அந்த வண்டை அது 'வா, வா!' என்று அழைக்கிறது. என்ன அழைத்து என்ன பயன்...?"

"வண்டு வரவில்லையாக்கும்?"

"ஊஹூம்; வரவில்லை—போயே போய் விடுகிறது!"

"அப்புறம்......?"

"அந்த வண்டைப் போலவே நீங்களும் என்னை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டீர்களோ, என்னமோ என்று நான் பயந்து போனேன். உடனே அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து வந்து உங்களைப் பார்த்தேன். நீங்கள் எந்தவிதமான கவலையுமில்லாமல் தூங்கிக் கொண்டிருந்தீர்கள்!—'நல்ல வேளை; பிழைத்தேன்' என்ற ஆறுதலுடன் மீண்டும் படுத்தேன். அப்புறம் தூக்கம் வரவில்லை; அதற்குள் பொழுதும் விடிந்து விட்டது!" என்று அகல்யா, தான் கண்ட கனவைச் சொல்லி முடித்தாள்.



"உன்னைப்போல் நானும் ஒரு கனவு கண்டேனே!" என்றான் கனகலிங்கம்.

"அது என்ன கனவு...?"

"சொல்கிறேன் கேள்: மாலை நேரந்தான்!—பொழுது போகவில்லை; கார்ப்பொரேஷன் காரர்கள் கடனுக்காக வைத்திருக்கும் ஒரு பூங்காவுக்குப் போய் நான் புற்றரையில் உட்கார்ந்து கொண்டிருக்

கிறேன். காலில் ஏதோ அரிப்பது போலிருக்கிறது; எழுந்து பார்க்கிறேன்—ஒரு கம்பளிப் பூச்சி என் வேஷ்டியில் ஒட்டிக்கொண்டிருக்கிறது!—அது கீழே விழுந்து தொலையட்டுமென்று நான் என்னால் ஆனமட்டும் வேஷ்டியை உதறி உதறிப் பார்க்கிறேன்—ஊஹூம்; அது விழுவே யில்லை!—அப்புறம் என்ன செய்வது? அதைக் கையால் தொடுவதற்கும் அருவருப்பா யிருக்கிறது; அங்கிருந்த ஒரு குச்சியை எடுத்து அதைத் தள்ளப் பார்க்கிறேன். அப்பொழுதும் அது கீழே விழவில்லை; குச்சியில் ஒட்டிக்கொண்டு விடுகிறது......"

"என்னைப் போல் என்கிறீர்களா......?"

"சீச்சீ! இல்லை, இல்லை; கம்பளிப் பூச்சியைப் போலத்தான்!"

"அப்படியானால் நான் கம்பளிப்பூச்சியா?"

"யார் சொன்னது, நீ கம்பளிப் பூச்சி என்று?"

"நீங்கள்தான்!" என்று கையை நீட்டிச் சொல்லி விட்டு, அகல்யா தலையைக் கீழே தொங்க விட்டுக் கொண்டாள்.

"அப்படியே இருக்கட்டும்; நான் என்ன, வண்டா?"

"யார்சொன்னது, நீங்கள் வண்டு என்று?"

"நீதான்!" என்று கனகலிங்கமும் கையை நீட்டிச் சொல்லிவிட்டு, அவளைப் போலவே தலையைக் கீழே தொங்க விட்டுக் கொண்டான்!

அவள் சிரித்தாள்; அவனும் சிரித்தான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு, "அதெல்லாம் சரி; இன்றிரவு நீ ஹோட்டல்காரரிடம் என்ன சொல்லப் போகிறாய்?" என்று கேட்டான் கனகலிங்கம்.

"இனிமேல் சொல்வதற்கு ஒன்றுமில்லை; ஏற்கெனவே எல்லாம் சொல்லியாகி விட்டது!"

"என்ன சொன்னாய்?"

"இன்று காலை, 'உன் கணவர் இன்னும் வரவில்லையா?' என்று அவர் கேட்டார். 'வரவில்லை; வருவதாகவே யில்லை' என்றேன் நான். 'ஏன்?' என்றார். 'மாற்றலான உத்தியோகத்தை மேலதிகாரிகள் ரத்துச் செய்து விட்டார்களாம். எனவே, சிக்கனத்தை முன்னிட்டு என்னைத் தம் நண்பருடன் கிளம்பிச் சென்னைக்கே வந்து விடச் சொல்லி அவர் கடிதம் எழுதியிருக்கிறார்; நான் இன்றிரவு போகிறேன்' என்றேன்—பேசாமல் இருந்து விட்டார்!"

"நானும் பார்க்கிறேன்—ஒருநாள் புளுகினால் அந்தப் புளுகு அத்துடன் நிற்பதில்லை; தொடர்ந்து புளுகிக்கொண்டே இருக்கச் செய்து விடுகிறது!" என்றான் கனகலிங்கம்.

"நிஜத்தைச் சொன்னால்தான் இந்த ஜனங்கள் வருத்தப் படுவதற்குப் பதிலாகச் சிரிக்கிறார்களே!" என்றாள் அகல்யா.

* * *

அன்றிரவு சென்னையை நோக்கிச் செல்லும் ரயிலில் இருவரும் போய்க் கொண்டிருந்தனர். வண்டியில் ஒருவரையொருவர் அறிந்தவர்களாகவே அவர்கள் காட்டிக் கொள்ளவில்லை; வாய்மூடி மௌனிகளாகச் சென்றனர். பொழுது விடிவதற்கும் வண்டி எழும்பூர் ஸ்டேஷனை அடைவதற்கும் சரியாயிருந்தது. இருவரும் முன்னும் பின்னும் பார்த்துக்கொண்டே வண்டியை விட்டுக் கீழே இறங்கினர்.

"வா, வா! நீகூட இந்த வண்டியில்தான் வருகிறாயா?—மாப்பிள்ளையும் இதே வண்டியில் வருவதாகத்தான் கடிதம் எழுதியிருந்தார்......!"

இந்தக் குரலைக் கேட்டதும் கனகலிங்கம் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அவன் நினைத்தது சரிதான்; அவனுடைய முதலாளி அங்கே நின்று கொண்டிருந்தார்!

அப்புறம் கேட்க வேண்டுமா?—"ஆ... மா...ம்..." என்று சொல்வதற்குள் அவன் கதிகலங்கிப் போனான்.

அதற்குள் அவனுடன் வந்திருந்த அகல்யா முதலாளியின் கவனத்தைக் கவர்ந்தாள். அவ்வளவுதான்; அவருடைய விழிகள் பிதுங்கிச் சிவந்தன!

அந்தப் பயங்கரமான விழிகளைக் கண்டதும் அகல்யா வியர்த்து விறுவிறுத்துப் போனாள். அதற்குப் பிறகு அவள் ஒரு நிமிஷம் கூட அங்கே நிற்கவில்லை; ஓடோடியும் சென்று ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் ஒளிந்து கொண்டாள்.

கனகலிங்கம் இவை யொன்றையும் கவனிக்கவில்லை. அவன் முதலாளியை நெருங்கி, "வீட்டுக்குப் போய்க் குளித்து விட்டுக் கடைக்கு வருகிறேன்......!" என்று தட்டுத் தடுமாறிக் கொண்டே சொன்னான்.

முதலாளியின் காதில் எதுவுமே விழவில்லை; அகல்யா சென்ற திக்கையே அவர் பார்த்தது பார்த்தபடி நின்றார்!

அவருடைய பதிலை எதிர்பாராமல் கனகலிங்கம் துணிந்து ஸ்டேஷனை விட்டு வெளியேறினான். அகல்யா பீதியுடன் அவனைப் பின் தொடர்ந்தாள். (தொடரும்)

''சமதர்மம் என்றால் என்ன?''—உங்களுக்குத் தெரியாவிட்டால் மிஸ்டர் அப்புவைக் கேளுங்கள்!

# மிஸ்டர் அப்பு

கோணல்

## 7. மீனாவின் காதல்

மீனாவின் கழுத்தில் பளபளவென்று மின்னும் பவுன் சங்கிலி ஒன்றும், கையில் ஒரு ஜோடி வளையல்களுமிருந்தன. அவைகள் பத்திரமாக அடக்கம் செய்யப்பட்டிருந்த சிறிய அட்டைப்பெட்டியும் மெல்லிய காகிதமும் கீழே தரையில் கிடந்தன. சங்கிலி சுமார் ஐந்து சவரனாவது இருக்கும். வளையல்களையும் ஐந்து சவரன் மதிப்பிடலாம். அவைகளைப் பார்த்தவுடன் அவள் முகத்தில் ஒரு ஆசை எழுந்தது. ஆனால் கணநேரத்தில் அவளது அழகிய முகம் வாட்டமடைந்து விட்டது. மன ஆழத்தில் நின்று அவள் யோசிக்கத் தொடங்கினாள். அவள் விட்ட ஆழ்ந்த பெருமூச்சு ஒன்றினால் அவள் மார்பகம் உயர்ந்து அடங்கியது. அவளுக்கு நகைப் பித்து இல்லை. வாழ்க்கையில் அதைவிட உயர்ந்த ஆசைகள் எவ்வளவோ உண்டு. தன்னுடைய சகோதரனின் ஆக்ஞையில் நடக்கும் போலி நாடகத்தின் இந்த இரண்டாவது காட்சி அவள் மனதை மிகவும் வேதனைப் படுத்தியது. இதன் முடிவு எப்படிப்பட்டதாயிருக்குமென்று அவளுக்கு நன்றாகத் தெரியும். அதை எப்படி வேண்டுமானாலும் முடிக்கும் சுதந்திரம் மீனாவிடம்தானே இருந்தது! தன் சகோதரனுக்கு எதிரிடையாக நடக்க வேண்டுமே என்பதற்காகத்தான் மீனா சிறிது வருந்தினாள். சங்கரனைப் பற்றி அவள் அவனைப் பார்ப்பதற்கு முன்னாலேயே ஒரு தினுசாகத் தீர்மானித்திருந்தாள். அவனைப் பார்த்த பிறகு அவளுடைய தீர்மானம் ஸ்திரமாகியதே தவிர அவள் மனதில் வேறு எவ்விதப் புரட்சிகரமான மாறுதலும் ஏற்பட்டு விடவில்லை.

அவள் சகோதரன் அப்பு அப்பொழுது அவள் எதிரில் தான் நின்று கொண்டிருந்தான். சங்கரன் மீனாவுக்காக வாங்கிக் கொடுத்த நகைகளை எவ்வளவு உவகையுடன் மீனாவிடம் கொடுத்தானோ அவ்வளவு உவகையும் மீனாவின் முகலட்சணம் மாறியதிலிருந்து எங்கோ












பறந்து விட்டது. 'இப்படியும் ஒரு அசட்டுப் பெண் உண்டா!' என்பது போல் அவள் முகத்தையே இரக்கத்தோடு பார்த்துக் கொண்டு நின்றான்.

மீனு ஒரு அலட்சியப் புன்னகையுடன், "அண்ணு! உன் சிநேகிதர் சங்கரன் அரைப் பயித்தியமாய் இருப்பாரோ, இப்படிப்பட்ட அசட்டுக் காரியங்களெல்லாம் செய்ய...!" என்றாள்.

"யார் பயித்தியம்...! அவனு! நீதான் பயித்தியம். ஒரு பணக்காரப் பையனுக்கு மனைவியாகப் போக உனக்கு வருத்தமாய் இருக்கிறதா! இப்படி உனக்கு அதிருஷ்டம் ஏற்படும் என்று நான் கனவுகூடக் காணவில்லையே!" என்றான்.

"கனவு கண்டிருந்தால் தொலையட்டும் என்று விட்டு விடலாம், அண்ணு! அதனால் ஒன்றும் தொல்லை இல்லை. ஆனால் இப்படி நிஜமாகவே வந்து விட்டதுதான் எனக்கு மிகவும் சங்கடமா யிருக்கிறது. பணக்காரர் வீட்டுப் பையனாயிருந் தால் மட்டும் போதுமா! கொஞ்சம் புத்தியும் இருக்க வேண் டாமா!" என்றாள் மனோவிசாரத்துடன்.

"உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். அவனுக்கா புத்தியில்லை! ஏகப்பட்டது இருக்கிறது. அந்தப் புத்தியைச் செலுத்தும் வழி தெரியவில்லை. அந்தப் புத்தியை ஒரு கரடு முரடான பாதையில் திருப்பி இருக்கிறான் சங்கரன். அவ்வளவுதான்! அவனுக்கு இந்த உலக ஜனசமுதாயத்தையே ஒரு உருவாக்க வேண்டுமென்று ஆசை. சிலர் பணக்காரர்தான் வாழ வேண்டு மென்கிறார்கள். சிலர் ஏழைகள்தான் வாழ வேண்டு மென்கிறார்கள். ஆனால் சங்கரனின் கொள்கை அப்படி இல்லை. சமதர்மமானது. பணக்காரர், ஏழை எல்லோரும் வாழ வேண்டுமென்பது அவன் கொள்கை. அதாவது குதிரையைத்தான் வண்டியில் கட்டி ஓட்டலாம் என்பதல்ல; கழுதையையும் கட்டி ஓட்டலாம் என்று அவன் உலகத்திற்கு நிரூபிக்க விரும்புகிறான்...."

"சரிதான்! அழகாக இருக்கிறது. அவரோடு நீ வேறு சேர்ந்து கொண்டாய், அரைப் பயித்தியத்தை முழுப் பயித்திய மாக்க! குதிரை, கழுதை இரண்டையுமே பக்கத்துக்கு ஒவ்வொன்றாகக் கட்டி ஓட்டினாலும் ஓட்டுவீர்கள். உலகத்தையே பக்குவ மாக்கப் போகிற இவ்வளவு பெரிய மனிதரை நான் கல்யாணம் செய்து கொண்டு சமாளிக்க முடியாது, அண்ணு! எனக்குச் சாதாரணமான புத்தியோடு இருக்கிற புருஷன் அகப்பட் டாலே போதும்" என்றாள் பரிச்சென்ற குரலில்.

"மீனு, உனக்கு ஒன்றும் புரியவில்லை. உன்னைக் கல்யா ணம் செய்து கொண்டவுடன் அவன் புத்தி தானே ஒரு அமை திக்கு வந்து விடும். அவன் ஒரு பணக்காரப் புள்ளி என்பது தான் முக்கியம். அதை மறந்து விடக் கூடாது. ஒரு சிறிய முள்ளில் பெரிய திமிங்கிலத்தை இழுத்தது போலல்லவா அவனை இழுத்திருக்கிறேன்!"

"அண்ணு, அந்தத் திமிங்கிலத்தை இழுக்க உன் கைத் தூண்டில் முள்ளாக என்னைத்தானு உபயோகிக்க வேண்டும்! இது ரொம்ப கேவலம். நான் இந்த வீட்டில் இருப்பது உனக் கும் அம்மாவுக்கும் ரொம்ப பளுவாக இருக்கிறது. அதற்காக இப்படியெல்லாம் செய்து உங்கள் பாரத்தை உதறிவிட நினைக் கிறீர்கள்!" என்றாள் துக்கத்துடன்

அப்பு அவளைச் சமாதானம் செய்யும் தோரணையில் கெஞ் சுதலான குரலில் "மீனு, நீ ரொம்பத் தவறாக நினைக்கிறாய். உன்னுடைய க்ஷேமத்தில்தான் எனக்கும் அம்மாவுக்கும் கவலை. நீ ஒரு பணக்காரக் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டு..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

"பணக்காரக் குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டால்தான் கஷ்டம், அண்ணு! நம்மைப் போன்ற ஒரு ஏழைக் குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டால்தான் சமமான மரியாதையும் மன மொத்த வாழ்க்கையும் சந்தோஷமும் இருக்கும். தவிர எனக் குச் சங்கரனிடம் துளிக்கூட ஆசை இல்லை, அண்ணு! அவரைப் பார்த்தாலே எனக்கு விநோதமாய் இருக்கிறதே தவிர வேறு எவ்விதமான ஆசையோ அர்வமோ ஏற்படவில்லை. என் கல்யாண விஷயத்தை நானே கவனித்துக் கொள்கிறேன்.

நான் ஒருவரை விவாகம் செய்து கொள்வதாகத் தீர்மானித்து விட்டேன். அவரும் என்னைக் கைவிட மாட்டார்!'' என்றாள் தழு தழுத்த குரலில்.

அப்புவுக்கு மீனாவின் வார்த்தை ஏதோ புதிர் போட்டதுபோ லிருந்தது. அவன் திடுக்கிட்டான். ''நீ ஒருவரை விவாகம் செய்து கொள்ள விரும்புகிறாயா! யார் மீனா அவர்...!'' என்றான் ஆச்சரியத்துடன்.

''சங்கரனைப்போல் இல்லை, அண்ணா! அவர் ஒரு சாதாரண ஏழை மனிதர்தான். எதிர் வீட்டில் குடி இருக்கிறார். ஏதோ ஒரு துணிக்கடையில் குமாஸ்தாவாய் இருக்கிறாராம். உனக்குக் கூடத் தெரிந்திருக்கும்...'' என்றாள் மெதுவாக.

அப்புவுக்கு ஆச்சரியத்திற்கு மேல் ஆச்சரியமாக இருந்தது. ''ஆம், ஒரு வாலிபன் எதிர் வீட்டில் இருக்கிறான். அவனுக்கும் உனக்கும் எப்படித் தொடர்பு ஏற்பட்டது!'' என்றான் ஆத்திரத்துடன்.

''எல்லாம் தெய்வ சங்கல்பமாக ஏற்பட்ட தொடர்புதான்! நானாக அவரிடம் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவில்லை....'' என்றாள் வெட்கத்தோடும் பயத்தோடும்.

''தெய்வ சங்கல்பத்தாலா! — எப்படி!'' என்றான் தெளிவுறாத சித்தத்தோடு அப்பு.

''அவரோடு அவருடைய வயதான தாயார் மட்டும்தானிருக்கிறாள். அவருக்கு மாதச் சம்பளம் நாற்பது ரூபாய்தானாம். அதில் தான் குடித்தனம் நடக்கிறது. இதைத் தவிரப் போஸ்டாபீஸில் இந்நூறு ரூபாய் போட்டு வைத்திருக்கிறாராம், கல்யாணச் செலவுக்காக! இரண்டு நாளாக அவருடைய தாயாருக்கு உடம்பு சரியாயில்லை. பாவம்! அந்த மாமி தன் தள்ளாத வயதில் உடம்பு சரியாய் இல்லாதபோது கோவில் கிணற்றுக்கு மூன்றாநாள் சாயந்திரம் தண்ணீர் எடுக்க வந்தாள். நானும் அந்தச் சமயம் கோயில் கிணற்றுக்குப் போயிருந்தேன். அந்த மாமி சிரமத்தோடு கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு வரும்பொழுது மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விட்டாள். குடம் கீழே விழுந்து தண்ணீரெல்லாம் கொட்டிவிட்டது. நான் மறுபடியும் குடத்தில் தண்ணீரை எடுத்துக் கொண்டு அந்த மாமியையும் மெதுவாக வீட்டிற்கு அழைத்து வந்தேன்'' என்று ஒரு பெருமூச்சு விட்டு நிறுத்தினாள்.

''அப்புறம்....!'' என்றான் அப்பு.

''அதிலிருந்து அடிக்கடி நான் அவர்கள் வீட்டிற்குப் போவேன். அந்த மாமிக்கு உதவியாக ஏதேனும் காரியம் இருந்தால் செய்து கொடுத்துவிட்டு வருவேன்'' என்று சொல்லி நிறுத்தினாள்.

''சரிதான்; இதிலிருந்து உனக்கும் அந்தப் பையனுக்கும் சினேகிதம் ஏற்பட்டதுபோ லிருக்கிறது!'' என்றான் அப்பு.

''ஆமாம்; அதற்கு முன்னால் அவர் என்னை எவ்வளவோ தடவை பார்த்திருக்கிறார். ஆனால் நேற்றுத்தான் அவர் என்னோடு பேசினார்.....!'' என்றாள் வெட்கத்துடன்.

''சரிதான்; என்ன பேசினான்!'' என்றான் அப்பு.

மீனா வெட்கத்தைச் சமாளித்துக் கொண்டு ''நேற்று நான் அவர்களுடைய வீட்டிற்குப் போயிருந்தபொழுது அவரைத் தனியாகச் சந்திக்கும்படி யாகிவிட்டது. அவர் என்னைப் பார்த்து 'நீ என் தாயாருக்குச் செய்யும் உதவிக்காக அவள் ரொம்ப சந்தோஷப்படுகிறாள்' என்றார். நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. சிரித்துக் கொண்டே மெதுவாக வந்துவிட நினைத்தேன். ஆனால் அவர் என்னை விடுவதாய் இல்லை....''

''இன்னும் என்ன சொன்னான்...!'' என்றான் பதட்டத்துடன் அப்பு.

''அவர் ஒன்றும் வித்தியாசமாகச் சொல்லி விடவில்லை. 'நீ அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து என் தாயாருக்கு உதவியாய் இருப்பதில் எனக்குக்கூட ரொம்ப சந்தோஷம்' என்றார். நான் ஒன்றும் அவரோடு பேசவில்லை. எனக்கு அவரைப் பார்க்கவே அப்பொழுது கூச்சமாய் இருந்தது. 'இந்தக் கடைசிக் காலத்தில் தனக்கு இப்படி ஒரு நாட்டுப் பெண் கிடைக்கவேண்டுமே என்றுதான் என் தாயார் ஆசைப்படுகிறாள்' என்றார் சிரித்துக்கொண்டே. எனக்கு அதற்குமேல் அங்கு நிற்க வெட்கமாக இருந்தது. மெதுவாக அடியெடுத்து வைத்தேன். ஆனால் அவர் 'ஏன் பயப்படுகிறாய்! என்னோடு












தாராளமாய்ப் பேசலாம்.' பேசு......!' என்றார். நான் அவரோடு என்ன பேசுவது! தலை குனிந்தபடியே நின்று கொண்டிருந்தேன். 'அதிருக்கட்டும்: என் தாயாருக்குக்கூட நீயே அவனுக்கு நாட்டுப் பெண்ணாய் வந்துவிட மாட்டாயா என்று ஆசை—ஆசை இருக்கலாம். ஆனால் உன் அபிப்பிராயம், உன் தாயார் அபிப்பிராயம், உன் தமையனாரின் அபிப்பிராயம் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டாமா! நான் மிகவும் ஏழை. சொற்பச் சம்பளம்' என்றார்'' என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டாள் மீனா.

"நீ என்ன சொன்னாய்!" என்றான் துடிப்புடன் அப்பு.

"நான் என்ன சொல்லுவது! நான் பாக்கியசாலிதான் என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டேன். ஆனால் ஒன்றுமே பேசவில்லை. அவரே மறுபடியும் பேசினார்: 'மீனா! என்னைக் கல்யாணம் செய்து கொள்ள உனக்கு இஷ்டந்தானே!' என்றார். அப்பொழுதுதான் எனக்கு அவரோடு பேசும் துணிவு ஏற்பட்டது. 'இஷ்டம்தான்; ஆனால் வரதட்சிணையோ சீர் வகையோ செய்து கல்யாணம் செய்து கொடுக்கும் அந்தஸ்து எங்கள் குடும்பத்துக்கு இல்லையே' என்றேன். அதற்கு அவர் 'அவைகளையெல்லாம் நான் விரும்பவில்லை. உன்னைத்தான் விரும்புகிறேன். தபாலாபீஸில் ஐந்நூறு ரூபாய் இருக்கிறது. அதை வைத்துக் கொண்டு கல்யாணத்தை அடக்கமாகச் செய்து விடலாம்' என்றார். நான் 'சரி' என்பது போல் தலையை ஆட்டிவிட்டு ஓடி வந்து விட்டேன்'' என்றாள் சிரித்துக் கொண்டே.

"ஆகவே உங்களுக்குள் பேசி ஒரு முடிவுக்கு வந்துவிட்டீர்கள், இல்லையா!" என்றான் அப்பு.

"நீயும் அம்மாவும் கலந்து பேசவேண்டியது பாக்கி இருக்கிறது, அண்ணா!" என்றாள் மீனா.

"நாங்கள் பேச வேண்டியது ஒன்றும் பாக்கி இல்லை. முகூர்த்தத் தேதியை நிர்ணயிக்க வேண்டியதுதான்!" என்றான் அப்பு.

"அது சரி! சங்கர் வாங்கிக் கொடுத்த இந்த நகைகளெல்லாம்...!" என்றாள் மீனா.

"உன்னுடைய கல்யாணத்திற்கு அவனுடைய வெகுமதியாக வைத்துக் கொள்ளலாம். இன்னும் உன்னுடைய கல்யாணச் செலவுக்குக்கூட அவனே செய்யும்படி வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறேன்" என்றான்.

"பாவம்! ஏன் அண்ணா இப்படியெல்லாம் ஏமாற்றிப் பணம் பறிக்கணும்!" என்றாள் மீனா.

"பாவமாவது! இதுதான் சமதர்மம். வீணாக ஒரே இடத்தில் குவிந்திருக்கும் பணத்தைப் பல நல்ல காரியங்களில் செலவிட வேண்டும். தகப்பன் சேர்த்து வைப்பதும் பிள்ளை அதைச் செலவு செய்வதும் பகவத் கீதையில் சொல்லப்படாத ஒரு பெரிய தர்மம். இதில்தான் சமதர்மம் உலகத்தில் உதயமாக வேண்டும். தெரிந்ததா, மீனா! இதுதான் என்னுடைய நான்கு வருஷ திட்டத்தில் அஸ்திவார அடித்தளக் கொள்கை. இவைகளை நிறைவேற்றத்தானே நான் பூமியில் அப்புவாய் அவதாரமெடுத்திருக்கிறேன்!" என்று சொல்லிவிட்டு அப்பு வெளியே போனான். (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## Kamba Ramayanam - A Study

அரசியல், இலக்கியம் என்ற இரண்டு துறைகளிலும் புகுந்து மகத்தான சேவைகளைப் புரிந்த ஸ்ரீ வ. வெ. சு. ஐயர் அவர்கள் கவிச்சக்கரவர்த்தி கம்பரிடத்திலும், அவர் இயற்றிய ராமாயணத்திலும் அளவில்லாத மோகம் கொண்டவர். கம்ப ராமாயணத்தை நன்றாகப் படித்து ரஸித்து, அதன் உண்மைச் சிறப்பை உள்ளபடி உணர்ந்துகொண்ட அறிஞர்களுள் ஐயர் முக்கியமானவர்.

ஐயர் தம் நாட்டு மக்களுக்குச் செய்துள்ள தொண்டுகளிலெல்லாம் மிகப் பெரிய தொண்டென்றே இந்நூலைச் சொல்ல வேண்டும். மற்ற பாஷைகளிலுள்ள பேரிலக்கியங்களையெல்லாம் ஊன்றிப் படித்து விட்டு, "கம்ப ராமாயணம் போன்ற இலக்கியப் பொக்கிஷம் வேறு எந்த மொழியிலும் இல்லை" என்று துணிந்து முடிவு கண்டவர் ஐயர்.

எனவே, தமிழிலுள்ள இத்தகைய இலக்கியக் களஞ்சியத்தின் கவிதை மணிகளையெல்லாம் பிற மொழியாளரும் அறிந்து பாராட்ட வேண்டும் என்ற நோக்கத்துடன், ராமாயண பாத்திரங்களின் குண சித்திரங்களைத் தனித்தனியே விளக்கி இந்நூலை இயற்றியிருக்கிறார். நாலாயிரத்துக்கு மேற்பட்ட கம்பர் பாடல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார்.

ஆகவே, தமிழர்களும், தமிழறியாத அயல் நாட்டாரின் ஆங்கிலமறிந்தவர்களும் இந்நூலின் மூலம் கம்பனை அறிந்து கொள்வதுடன், கம்பர் காவியத்தையும் அனுபவிக்க முடியும் என்பது திண்ணம். டில்லித் தமிழ்ச் சங்கத்தார் மேற்கொண்ட இந்த இலக்கியத் திருப்பணியை அகில உலகத் தொண்டு என்றே கருதப்பட வேண்டும்.

ஸ்ரீ வ. வெ. சு. ஐயர் அவர்கள் இயற்றிய இம்மாபெரும் நூலை அச்சிட்டு வெளியாக்க வேண்டுமென்ற ஆர்வம் பல தமிழன்பர்களுக்குப் பல காலமாக இருந்து வந்தது. ஆனால் அந்த ஆர்வத்தை வெளியிடுவதுடன் அவர்களுடைய முயற்சி நின்று விட்டது. புத்தகத்தை அச்சிட்டு வெளியிடும் பாக்கியம் டில்லி தமிழ்ச் சங்கத்துக்கே கிடைத்தது. வாழ்க டில்லி தமிழ்ச் சங்கம்!

ஆசிரியர்: வ. வெ. சு. ஐயர் அவர்கள், வெளியீடு: டில்லித் தமிழ்ச் சங்கம், M. C. 1/3038, பார்லிமெண்ட் தெரு, புதுடெல்லி. விலை ரூபாய் 7. (தபால் கூலி ரூ 1 தனி.)

## அமர வாழ்வு

இறவாத புகழுடைய தேசபக்த வீரர் சுபாஷ் சந்திர போஸைப் பற்றிய செய்திகள் இன்னும் பத்திரிகைகளில் வெளிவந்த வண்ணம் இருக்கின்றன. மரணத்தைக் கடந்த அந்த மகா வீரர் சுதந்திரப் போர் நிகழ்த்திய வரலாறுகளைப் பின்னணியில் வைத்துக்கொண்டு ஆசிரியர் "கல்கி" புனைந்திருக்கும் கதைதான் "அமர வாழ்வு."

காதல், வீரம், பரிவு, பிரிவு முதலிய சுவைகள் இந்தக் கதையில் அமைந்திருக்கின்றன. வீரனுக்கு என்றும் மரணமில்லை என்னும் கருத்து நிலைக்க வைக்கும் பல சம்பவங்களுடன் வெளியாகிறது.

"கொள்ளை லாபம் அடிக்கும் கள்ள மார்க்கெட்டுக்காரர்கள், சமூகத் துரோகிகள். அவர்கள் விஷயத்தில் மிகக் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்" என்று அறிக்கை விடும் சர்க்கார், அந்தக் கள்ள மார்க்கெட்டுக்காரர்கள் பெரிய மனிதர்களாகவோ, சமூக வாழ்க்கையில் அந்தஸ்து உள்ளவர்களாகவோ இருந்து விட்டால் அவர்கள் விஷயத்தில் 'ஏனோதானோ' என்று இருந்து விடுகின்றனர். அதிகாரிகளும் அவர்கள் விஷயத்தில் உஷாராயிருக்கும்படி எச்சரிக்கை செய்யப்படுகின்றனர் என்பது பகிரங்க ரகசியம்.

இந்த விஷயத்தை அடிநாதமாக அமைத்து "அபலையின் கண்ணீர்" என்னும் திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த கதையைக் "கல்கி" தீட்டியிருக்கிறார்.

"திருடன் மகன் திருடன்" தன்னுடைய அரிய செயலினால் அன்னை ஜானகிக்குப் பெரும் வியப்பை அளிக்கிறான். அவர்கள் இருவரையும் குறித்து நாம் வியப்படைகிறோம்.

"நம்ம கண்டுவை உங்களுக்குத் தெரியுமோ, இல்லையோ? தெரியும் என்று ஒப்புக்கொண்டு விடுங்கள். தெரியாது என்று நீங்கள் சொன்னால் அவன் விட்டு விடப் போகிறானா என்ன? முதுகுவலிக்கு ஆளாவது தான் பலனாக முடியும்" என்று கதாநாயகன் கண்டு நமக்கு அறிமுகம் செய்து வைக்கப்படுகிறான். "கண்டுவின் சந்நியாசம்" என்னும் சிறுகதையைப் படித்து முடிப்பதற்குள், வரிக்கு வரி சிரிக்க வேண்டியிருப்பதால், வயிற்றுவலி ஏற்பட்டு விடக்கூடும்! ஜாக்கிரதை!

"இமயமலை எங்கள் மலை"யில் மின்னல் வேகத்தில் சம்பவங்கள் நிகழ்கின்றன.

"பொங்குமாங்கடல்" திருநெல்வேலியில், இந்நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் நடந்த புரட்சி இயக்கத்தை நிலைக்களனாகக் கொண்டு அமைக்கப்பட்ட கதை. ஸ்ரீ நீலகண்டப் பிரம்மச்சாரி, ஸ்ரீ வாஞ்சி ஐயர், ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை முதலியவர்கள் இக்கதையின் பின்னணியில் பவனி வருகிறார்கள்.

மேற்கூறிய கதைகள் அடங்கிய இப் புத்தகம் கண்கவர் வனப்புடன் விளங்குகிறது. [தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை ; விலை : ரூ. 3—8—0]

## ஒதெல்லோ

ஆங்கில மகாகவியான ஷேக்ஸ்பியரின் சிறந்த நாடகங்களில் ஒதெல்லோவும் ஒன்று. தன் மனைவியின் மீது சந்தேகப்பட்டுக் கொண்டு அவளைக் கொலைசெய்து விட்டுத் தானேபோலீஸாரிடம் சரணடையும் செய்திகளைத் தினசரிப் பத்திரிகைகளில் படிக்கிறோம். இந்தமாதிரி ஒரு சம்பவத்தை வைத்துக்கொண்டு கதையில் வரும் முக்கிய பாத்திரங்களின் மனப் போராட்டங்களையும் அதனால் ஏற்படும் விளைவுகளையும் அற்புதமாகச் சித்திரித்திருக்கிறார் ஷேக்ஸ்பியர். இந்த அருமையான இலக்கிய இன்பத்தை ஆங்கிலம் தெரியாத தமிழ் மக்களும் அனுபவித்து ரஸிக்கும்படி நாடகப்பண்பும் இலக்கியச் சுவையும் குன்றாமல் தமிழாக்கியிருக்கிறார் ஸ்ரீ சி. ஆர். மயிலேறு.

கிடைக்குமிடம் :— "கலாநிகேதன்," புது ஆசிரியர் தெரு, அண்ணாமலை நகர், தென் ஆற்காடு ஜில்லா.




"ஸார், உங்களுடன் ஒரு விஷயமாக ஒரு மணி நேரமாவது சாவகாசமாகப் பேச வேண்டும்......"

"அதற்கென்ன? சாயந்திரமானதும் இந்த பஸ் ஸ்டாண்டுக்கு வந்து விடுங்களேன். ஒரு மணியோ, இரண்டு மணியோ சாவகாசமாகப் பஸ் வருகிற வரையில் பேசிக் கொண்டே இருக்கலாம்!"

## பாரதியார்

"காக்கை குருவி எங்கள் ஜாதி" என்று பாடிய மகாகவி பாரதியார் தம் வாழ்நாளில் எப்படியிருந்தார் என்று அறிய எல்லோருக்கும் ஆவல் உண்டாவது இயல்பு.

சிறுமை கண்டு பொங்கும் சீரிய குணம் அவரிடம் இருந்தது. எல்லோரும் ஓர் குலம் என்று பாடிய பாரதியார் தம் வாழ்க்கையிலும் அவ்விதமே நடந்து வந்தார். இதையெல்லாம் விளக்கும் சம்பவங்கள் பல இந்நூலில் கூறப்பட்டிருக்கின்றன.

ஆசிரியர் : சக்திதாஸன் ; பிரசுரம் : வெங்கட்ரமணா அண்டு கம்பெனி, சென்னை-5. விலை : அணா 12.

## வாழ்க்கையில் வெற்றி

இந்தப் புத்தகத்தின் ஆசிரியர் அகில உலகப் பிரசித்தி பெற்ற "சண்டே எக்ஸ்பிரஸ்" என்ற பத்திரிகையை ஸ்தாபித்தார். வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்பட்டுச் சொந்த முயற்சியில் முன்னுக்கு வந்து உலகப் புகழ் பெற்றவர். அவர்தான் பீவர் புருக் பிரபு. இவருடைய புத்தகங்கள் பல லக்ஷக்கணக்கில் விற்பனையாகிப் பிரசித்தி பெற்றவை.

வாழ்க்கையில் முன்னுக்கு வரத் துடிக்கும் இளைஞர்களுக்கும் மற்றும் வாழ்க்கைப் பாதையில் தோல்வி கண்ட அதிர்ஷ்டஹீனர்களுக்கும் இந்த நூல் நல்ல வழிகாட்டியாக இருக்கும். இந்தப் பிரசித்தி பெற்ற புஸ்தகத்தைத் தமிழாக்கிப் பிரசுரித்த ஸ்ரீ ஜேம்ஸ் ஜே. மோஸஸ் தமிழுக்கு ஒரு நல்ல தொண்டு செய்திருக்கிறார்.

கிடைக்குமிடம்:—ஜேம்ஸ் ஜே. மோஸஸ், மீனாட்சிபுரம், நாகர்கோயில்.

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

★ ★ ★

- இருபத்தோரு தேசங்களைச் சேர்ந்த பிரசித்தமான பத்திரிகைகள் ஒத்துழைத்து அகில உலகச் சிறு கதைப் போட்டி ஒன்று நடத்துகிறார்கள்.
- இந்த முயற்சியை ஆரம்பித்த பத்திரிகை நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறு கதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புது டெல்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவின் முக்கியமான பதினொரு பாஷைகளிலாவது ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் தமிழ் எழுத்தாளர்கள் இந்த அகில உலகச் சிறு கதைப் போட்டியில் கலந்துகொள்ளலாம்.
- இந்தியா தேசத்தில் எழுதப்படும் கதைகளில் சிறந்த எட்டு கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கிறது. இதில் முதல் பரிசு ரூ. 1,500.
- அகில உலகச் சிறுகதைப் போட்டிக்கு ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இரண்டு அல்லது மூன்று கதைகள் பொறுக்கி அனுப்பப்படும். இப்படி மொத்தம் சேரும் 52 கதைகளில் எல்லாவற்றிலும் சிறந்த கதைக்கு "நியூயார்க் ஹெரால்டு டிரிப்யூன்" பத்திரிகை ஐயாயிரம் டாலர் (ரூ. 22,250) பரிசு அளிக்கும்.
- மேற்படி அகில உலகச் சிறு கதைப் போட்டிக்குத் தமிழ் நாட்டிலிருந்து கதைகளைச் சேகரிக்கும் பொறுப்பைக் "கல்கி" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- சிறு கதைகள் சுமார் மூவாயிரம் வார்த்தைகள் அடங்கியதாக இருப்பது நலம். நாலாயிரம் வார்த்தைகளுக்கு மேலே போகக் கூடாது.
- 1960-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள் மேற்படி சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- போட்டிக்கு அனுப்பும் கதைகள் சொந்தக் கற்பனையென்று கதை ஆசிரியரின் உறுதி மொழி சேர்க்கப்படவேண்டும்.
- கதையின் விஷயம் எதைப்பற்றி வேண்டுமானாலும் இருக்கலாம். காதல், குரோதம், நன்றி, வாஞ்சை, தேசபக்தி, தியாகம், லோபம், துரோகம், கலியாணம், மரணம்,—ஆகிய எந்த விஷயமானாலும் சரி; உணர்ச்சிப்பெருக்கு, அமைப்புத்திறன், வாழ்க்கைப் பண்பு, நடையின் சிறப்பு, கதையின் ஓட்டம், — ஆகிய சிறுகதையின் அம்சங்களே முக்கியமாகக் கருதப்படும்.
- ஒரே ஆசிரியர் போட்டிக்கு இரண்டு கதைகள் அனுப்பலாம்.
- தமிழ்க் கதைகளை அனுப்ப வேண்டிய விலாசம்:—ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை.
- தயவு செய்து உறையின் மேல் "**அகில உலகச் சிறுகதைப் போட்டி**" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுப்பதற்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தகுந்த நீதிபதிகளை நியமனம் செய்வார்.
- **மேற்படி போட்டிக்காக வரும் தமிழ்க் கதைகளை ஸ்ரீ தேவதாஸ் காந்தி நியமிக்கும் நீதிபதிகள் பரிசீலனை செய்து அவற்றில் சிறந்த நாலு கதைகளைத் தேர்ந்தெடுத்து மத்திய பரிசீலனைக் கமிட்டிக்கு அனுப்பி வைப்பார்கள். இந்த நாலு கதைகளுக்கும் "கல்கி" நிர்வாகிகள் ஒவ்வொன்றுக்கு ரூ. 250 வீதம் பரிசு அளிப்பார்கள்.**
- அகில இந்தியப் போட்டிக்காகப் பஞ்சாயத்தார் தேர்ந்தெடுக்கும் நாலு கதைகளையும் அவற்றின் ஆசிரியர்கள் தாங்களேயோ, பிறரைக் கொண்டோ ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தரவேண்டும்.
- பரிசுக்காகத் தெரிந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியான கதைகள் "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அப்படிப் பிரசுரிக்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 50 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப்பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்பவேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.

# வட்ட மேஜை

## மதமாற்றமா? மனமாற்றமா?

இரு நூறுக்கு மேற்பட்ட தமிழர்கள் புத்த மதத்தைத் தழுவிக் கொண்டனர் என்றும், பின்பு டாக்டர் அம்பேத்கார் அவர்கள் மேற்படி மதத்தில் சேர்ந்துள்ளவர்களுக்குப் பாராட்டுத் தந்தி ஒன்று அனுப்பி இருக்கின்றார் என்றும் சமீபத்தில் பத்திரிகைகளில் செய்திகள் வெளி வந்துள்ளன.

தாழ்த்தப்பட்டோர் புத்த மதத்தில் சேர்ந்து கொள்ள வேண்டுமென்பதற்கு டாக்டர் அம்பேத்கார் சொல்லும் காரணம் மிக விசித்திரமாக இருக்கின்றது! தாழ்த்தப் பட்டோர் புத்த மதத்தில் சேர்ந்து கொண்ட வுடனே சாதி வித்தியாசம் என்ற சமூக ஊழல் அழிந்தொழிந்து மறைந்து விடும் என்பது அவர் எண்ணம். நமது தேசத்திற்குக் கிறிஸ்துவ மதம் முதன் முதலில் வந்தபொழுது மேற்படி சலுகை கிடைத்துவிடும் என்ற எண்ணத்துடன் அம்மதத்தைத் தழுவிக் கொண்டவர்களும் உண்டு. இப்பொழுதும் அப்படிப்பட்டவர்கள் இருந்து வரத்தான் செய்கிறார்கள். மேலும் கத்தோலிக்க மதத்தில் தாழ்த்தப் பட்டவர் மாத்திரமன்றி உயர்த்தப்பட்டவரும் தான் இருக்கின்றார்கள். பின்பு ஏன் அவர்களிடத்திலும் சாதி பேதம்! கோவில்களிலும் கூட இந்தச் சாதி வேற்றுமை இப்பொழுதும் இருக்கத்தானே செய்கின்றது!

இப்படி இருக்க, இனிமேல் தாழ்த்தப் பட்டவர்கள் புத்தமதத்தில் அடைக்கலம் புகுந்தவுடனே சம அந்தஸ்தைப் பெற்று விடலாம் என்று கூறுவதை நம்பிவிட முடியுமா? ஒரு கட்சியிலிருந்து அதிகாரமுள்ள கட்சிக்கு மாறியவுடன் 'கனம்' என்று பட்டம் பெற்று விடக் கூடிய ஸ்தாபனமா மதமென்பது!

மதம் மாறாமல் மற்றவர்களுடைய (உயர்த்தப்பட்டோர் என்பவர்களுடைய) மனத்தை மாற்றிவிடுவதே மேலான வழி. மதத்தை மாற்றவேண்டும் என்ற எண்ணத்துடன் வேலை செய்பவர்கள் அந்த நேரத்தில் ஒரு பகுதியை மாத்திரம் மனிதருடைய மனத்தை மாற்றுவதில் செலவிடுவாராயின் சமூக ஊழல் எனும் சாதி பேதம் அற்றுப் போகும் காலம் வெகு தூரத்திலில்லை என்று திண்ணமாகக் கூறலாம்.

கொழும்பு
4—9—50 — எம். ஏ. அப்பு

○●○

## ★ தம்பிடி நாணயங்கள்

தம்பிடி நாணயங்கள் கூட 'கம்யூனிஸ்டு' வேலை செய்யத் துவங்கி விட்டன போலிருக்கிறது! இல்லாவிட்டால் அவைகளும் நெடு நாட்களாகவே தலைமறைவாக இருக்க வேண்டிய காரணமில்லை! இரண்டாம் உலக மகா யுத்தத்திற்குப் பிறகு தம்பிடி நாணயங்களே சுத்தமாகப் புழக்கத்திலிருந்து விடை பெற்றுக் கொண்டு விட்டன! பணவீக்கத்தின் காரணமாகவும், தம்பிடி நாணயங்கள் பெரும்பான்மையோருக்குத் தேவைப்படாதவை என்று கருதுவதாலும் 1946-ம் ஆண்டிலிருந்தே தம்பிடி நாணயங்கள் அச்சிட்டு வெளியிடுவதை நம் மத்திய அரசாங்கம் நிறுத்தி விட்டதாகத் தெரிகிறது. பொதுவாக எல்லா மக்களுக்கும், குறிப்பாக ஏழை மக்களுக்கும் மிக மிக அத்யாவசியமானவை சிறிய தம்பிடி நாணயங்கள்தான்! தம்பிடி நாணயங்கள் அளவில் சிறியதாகவும், மதிப்பில் குறைந்ததாகவும் இருக்கலாம். அதனாலேயே அவற்றை அலட்சியப்படுத்தி விட முடியுமா! சிறு துளி பெரு வெள்ளம்!

இந்த ஆண்டு ஆகஸ்டு 15-ந் தேதி புது நாணயங்கள் பல வெளி வந்தன. அவற்றுள் தம்பிடி நாணயங்கள் இல்லாதது ஒரு பெருங் குறை என்றே சொல்லலாம்! ஏழைகள் நிறைந்த நம் நாட்டில் "ஏழைப் பணம்" தம்பிடி, ஏழைகளுக்கு உயிர்நாடி போன்றது! குழந்தைகள் அழுகிற வேளையிலோ அல்லது மற்ற சமயங்களிலோ, தம்பிடிக்குக் கிடைக்கக் கூடிய மிட்டாய்களை வாங்கிக் கொடுத்துத் திருப்திப்படுத்துவான் ஓர் ஏழை. இன்றைக்குத் தம்பிடி நாணயங்கள் இல்லாத குறையால் தம்பிடிக்குப் பதிலாக, காலணாவாகச் செலவிட வேண்டியிருக்கிறது. ஏழைகளுக்குச் செலவை அதிகரிக்கச் சூழ்நிலை ஏற்படுகிறதே யொழியச் சிக்கனத்தைக் கையாள வசதி மறைந்து விட்டது. மற்றும் கடைகளில், குறிப்பாக அரிசிப் பங்கீடு கடைகளில், ஒரு தம்பிடியோ, அல்லது இரண்டு தம்பிடியோ துண்டு விழுந்தால், முழுசாக, காலணா செலுத்த வேண்டியிருக்கிறது. பல மணி நேரம் தவங்கிடந்து 'ஆறு அவுன்ஸ்' அரிசியாவது கிடைத்ததே அதுவே போதும் என்று நினைக்கிறவனுக்கு, கடைக்காரனிடம் தம்பிடிக்குக் காலணாவாகக் கொடுத்து விட்டு இரண்டு தம்பிடிகளை வாதாடி வாங்க, வகையில்லாமலும், வசதியில்லாமலும் நேரமில்லாமலும், வேதனை உள்ளத்தோடு வீடு திரும்ப வேண்டியிருக்கிறது. தம்பிடி நாணயங்கள் இருந்தால் இக்குறை எழ இடமில்லையல்லவா!

சிந்தாதிரிப்பேட்டை
10—9—50 — ப. திருவேங்கடம்

○●○

## ★ கௌரவம் வேண்டும்

'பெண்களும் ஆடவரைப்போல் வேலைக்குச் சென்று சம்பாதிக்க வேண்டும்' என்ற மனப்பான்மை சமீபகாலமாக மக்களிடையே பரவி வருகிறது.

குழந்தைகளைப் பாதுகாக்கும் பொறுப்பை முதலில் யோசித்த பின்னரே பெண்கள் ஆபீசுக்குச் செல்ல முன் வர வேண்டும். ஆபீஸிலிருந்து களைப்புடன் திரும்பிய தம்பதிகள் ஒருவருக்கொருவர் உற்சாகமூட்டும் வகையில் இருப்பார்களா என்பது சந்தேகம். வீட்டு வேலைகள் செய்யச் சம்பளம் கொடுத்துத் தனி ஆள் அமர்த்த வேண்டும். இதைவிட மனைவியே ஆபீசுக்குச் செல்லாமல் வீட்டு வேலைகளை நிர்வகிக்கலாம். கணவன் தானே ஆபீஸ் வேலையுடன் வீட்டு நிர்வாகத்தையும் நடத்த முன் வந்தால் நாளடைவில் பலவீனமடைந்து

வைத்தியரின் பணப்பையைப் பெருக்க வைக்கும் பணியில் ஈடுபட நேரிடும்.

குடித்தனத்தைச் சிரமமின்றி நடத்த வேண்டும் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டு மனைவி வேலையில் அமர்வதை முதலில் எல்லோரும் அங்கீகரிப்பார்கள். நாளடைவில் அவளுடைய கௌரவத்தைக் குலைக்கும் வகையில் பேசவும் அஞ்ச மாட்டார்கள். முதலில் கொஞ்ச நாட்கள் இத்தகைய இல்வாழ்க்கை சிறப்புற்று விளங்கும். ஆனால் நாளடைவில் தம்பதிகளிடையே ஒரு காரணமுமற்ற சந்தேகம் ஏற்பட்டு வாழ்க்கை வேம்பாகி விடும். ஒரு மனிதனின் மனோ நிலை மனைவியினுடையதிலிருந்து அப்பாற்பட்டது. வருஷக் கணக்காக ஆபீஸ் செல்லும் கணவனின் நடத்தையைப் பற்றிக் கனவிலும் தப்பாகக் கருத மாட்டாள் மனைவி. ஆனால் மனைவி ஒரு மாதம் வேலை செய்வதற்குள் மனைவி மீது கணவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டு விடும். இது உலக இயல்பு இது மனிதனின் தோல்வி. பெண்மையின் வெற்றி. வெளி உலகில் கணவனின் சம்மதத்தின் பேரில் இறங்கிய 'அலை ஓசை' கதாநாயகி சீதாவின் கதி எல்லோருக்கும் நினைவிலிருக்க வேண்டும். தம்பதிகளிடையே எழுந்த சந்தேகமே அவர்களின் வாழ்க்கைத் தீபத்தை அணைத்து விட்டது. "உலக விளக்கை ஏற்ற வேண்டும் என்ற ஆசை தனது வீட்டு விளக்கை அணைத்து விடும்" என்ற அரிய கருத்தைக் கவி ரவீந்திரநாத் தாகூர் 'வீடும் உலகமும்' என்ற நவீனத்தில் வெளிப்படுத்தியிருக்கிறார். "பெண்கள் தொட்டில் ஆட்டும்போது ஏற்படும் சோபை அவர்களுக்குக் கார் ஓட்டும் போது ஏற்படுவதில்லை. வீட்டின் தலைவியாக இருப்பதில் உள்ள பெருமை மாதர் சங்கத்தின் தலைவியாக இருப்பதில் ஏற்படுவதில்லை. குடும்பத்தை நிர்வகிக்கும்போது அவர்களுக்கு ஏற்படும் கௌரவம் உத்தியோகங்கள் வகிப்பதால் உண்டாவதில்லை" என்று சீன ஆசிரியர் லின்யுடாங் கூறியுள்ளார்.

பெண்கள் கௌரவத்தைப் பாதிக்காத பல வித தொழில்களில் ஈடுபடலாம். மேலும் சங்கீதம், தையல் போன்ற கலைகளை நன்கு பயின்ற பெண்கள் ஓய்வு நேரங்களில் தங்கள் வீடுகளிலேயே சிறிய சங்கீத வகுப்புகள் நடத்தி அதன் மூலம் பணம் சம்பாதிக்கலாம். ஆற்றல் உள்ளவர்கள் பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதி, (பத்திரிகாசிரியரின் குப்பைக் கூடை குறுக்கிடாத வரையில்) தங்கள் வருவாயைப் பெருக்கலாம். உதாரணமாக வடநாட்டில் ஒவ்வொரு மராட்டியர் வீட்டிலும் தையல் வகுப்பு நடத்தி சுமார் ரூ. 40 வரை சம்பாதிக்கிறார்கள்.

ஆகையால் சகோதரிகள் அனைவரும் இம்மாதிரி கலைகளைப் பயின்று தத்தம் குடும்பக் கஷ்டங்களை நீக்கிக் கொள்ளலாம் அல்லவா!

**திருச்சிராப்பள்ளி**
**8—9—50** **கமலா சேஷாத்திரி**

○●○

## அன்பரின் தவறு

செப்டம்பர் 19உ கல்கி இதழில் வட்ட மேஜைப் பகுதியில் "கல்கி அன்பன்" எழுதியிருந்த கடிதத்தைப் படித்தவுடன், என் போன்ற பல நேயர்களுக்கு மிஸ் மேயோ என்னும் அம்மையார் எழுதிய "மதர் இந்தியா" (Mother India) என்னும் புத்தகத்தின் நினைவு வந்திருக்கும்.

அன்பரின் ரயில் பிரயாணத்தின் போது ஒரு பெண்மணி ஆடவனை அடிக்க வந்த ரசமான சம்பவத்தைப் பற்றிக் கூறியுள்ளார். அவர் எழுதியிருப்பதை உற்று நோக்கினால், அவ்வாறு அசம்பாவிதமாக நடந்து கொண்ட பெண்மணி கல்வி வாசனையற்ற நாட்டுப்புறத்துப் பெண் என்று தெரிகிறது. இந்த ஒரு சிறு சம்பவத்தை வைத்துக் கொண்டு தமிழ் நாட்டுப் பெண்கள் எல்லோரும் இதே இயல்பை உடையவர்கள் என்று எண்ணுவது பெருந்தவறு. இந்தியாவிலேயே பண்பாடுடைய பெண்கள் தமிழகத்தில்தான் இருக்கிறார்கள் என்றால் அது மிகையாகாது.

"தமிழர்களின் ஆடைகள் வெண்மையாக இல்லை" என்று அன்பர் குறை கூறியுள்ளார்.

தமிழர்களின் ஆடைகள் பழுப்பு நிறமாக இருந்தாலும் அவைகள் அன்றாடம் துவைக்கப்பட்டுச் சுத்தமாக இருக்கும்.

தமிழ் நாட்டுப் பெண் மட்டும் தான் புகையிலை, பொடி போன்ற லாகிரி வஸ்துக்களை உபயோகிக்கிறார்கள் என்று அன்பர் வருந்துவதற்கிடமில்லை. திருவாங்கூரில் தமிழ்நாட்டை விட அதிகமாகப் புகையிலை, பொடி போன்ற லாகிரி வஸ்துக்களை உபயோகிக்கும் பெண்கள் அநேகம் பேர் இருக்கிறார்கள் என்பதை அன்பர் மறந்து விடக் கூடாது.

தமிழ் நாட்டு ஆலயங்கள் எல்லாம் இருட்டாக இருக்கிறது என்று அன்பர் நகைச்சுவை ததும்பக் கூறியுள்ளார். அதனால் அவர் இங்கிருக்கும் ஆலயங்களுக்குத் திருவிழா நாட்களைத் தவிர மற்ற நாட்களில் சென்றதில்லை என்று எண்ணுகிறேன். ஏனெனில் திருவாங்கூர்ப் பக்கங்களில் இருக்கும் ஆலயங்களும் அதே நிலையில்தான் இருக்கின்றன என்பதை மிகுந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திருவனந்தபுரம்**
**11—9—50** **டி. ஆர். ராமா செட்டியார்**

○●○

## நெசவாளர் நிலை

தற்போது நெசவாளர்களுக்கு நியாயமான முறையில் நூல் கிடைக்காமல் தங்கள் தங்கள் ஊர்களை விட்டு வெளியூர்களுக்குப் பிச்சை எடுக்கச் சென்று கொண்டிருக்கின்றார்கள். 1941-ம் வருஷம் நெசவாளரிடையே ஏற்பட்ட பஞ்சத்தைக் காட்டிலும் பெரியதொரு பஞ்சம் வரும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. அந்தக் காலத்தில் பொது மக்களிடையே அரிசிப் பஞ்சம் கிடையாது. ஆகையால் அப்போது நெசவாளர்களுக்குப் பிச்சையாவது கிடைத்துக் கொண்டிருந்தது. தற்போது அரசாங்கத்தார் கொடுக்கும் அரிசியே போதாமல் இருப்பதால் பொதுமக்கள் நெசவாளர்களுக்கு எவ்விதம் பிச்சை போட முடியும்?

நூல் கண்ட்ரோல் விலை பத்து வருஷங்களில் அதிகமாக ஏறி விட்டது. கள்ள மார்க்கெட்

விலையோ தற்போது கண்ட்ரோல் விலையைக் காட்டிலும் 10 ரூபாயிலிருந்து 50 ரூபாய் வரை ரகத்திற்குத் தகுந்தவாறு அதிகமாக இருக்கின்றது. அப்படி நெசவாளர்கள் அதிகவிலை கொடுத்து நூல் வாங்கினாலும் அதற்குத் தகுந்த கூலியோ, லாபமோ கிடையாது. நஷ்டம்தான் ஏற்படுகிறது. சில பாஸ்டர் வீவர்கள் கிடைத்த நூலைத் துணி உற்பத்தி செய்து தங்களுக்கு வாடிக்கையாளவர்களுக்கும், வெளி தேசங்களுக்கும் அனுப்புகின்றார்கள்.

மாகாணத்தில் நூல் நிலை மாதா மாதம் மோசமாகி வருகின்றது. நமது மாகாணத்தில் தற்போது பத்துலட்சம் தறிகள் இருக்கின்றன. அவர்கள் சுமார் இருபத்தொரு நாட்கள் வேலை செய்ய வேண்டுமானால் சுமார் 35,000 பேல்கள் தேவையாயிருக்கின்றன. சென்ற மாதம் மாகாணத்திற்குக் கொடுக்கப்பட்ட பேல்கள் 11,000 தான். அதிலும் விசைத் தறிகளுக்கும் நிட்டிங் பாக்டரிகளுக்கும், கயிறு பின்னுகிறவர்களுக்கும், பீடி சுருட்டுபவர்களுக்கும், இது போன்ற குடிசைத் தொழிலுக்கும் நூலின் ஒரு பகுதியைக் கொடுக்க வேண்டியிருக்கின்றது. கடைசியாக நெசவாளர்களுக்குக் கிடைப்பது சொற்பந்தான். அந்த நூலையும் நெசவாளர்களுக்கென்று ஜில்லா அதிகாரிகள் பார்த்து விநியோகிப்பதில்லை. யார் வேண்டுமானாலும் நூல் வாங்கிக் கொள்ளலாம் என்ற சலுகையினால் வண்டி ஓட்டுபவர்களும், டீ கடைகளில் வேலை செய்வோரும், இன்னும் இதரர்களும் முண்டியடித்துக் கொண்டு முன் நின்று நூல் வாங்கி நடுக் கடைத் தெருவிலேயே கள்ள மார்க்கெட்டுக்கு விற்கின்றார்கள்.

மில் சொந்தக்காரர்கள் தாராளமாக வெளி தேசங்களுக்கு நூலை அனுப்பலாம் என்ற சலுகையின் பேரிலும், அதிக விலை கிடைக்கின்றதே என்ற காரணத்தாலும் மில்லில் உற்பத்தியாகும் எல்லா நூலையும் வெளி தேசங்களுக்கு அனுப்ப ஏற்பாடு செய்கின்றனர். இதை உடனே தடை செய்யச் சென்னை அரசாங்கம் மத்திய அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

கரூர்
9—9—50 டாக்டர் கே. எஸ். கோபாலசாமி

○●○

## புதிய மார்க்கெட்

உணவுப் பஞ்சம் காரணமாகப் "பிள்ளை மார்க்கெட்" என்று ஒரு புதிய மார்க்கெட் உண்டாகியிருப்பதை நாம் பத்திரிகைகள் வாயிலாக அறிகிறோம். இதன் காரணம் பட்டினி என்ற பிணியே. எங்காவது பட்டினிச் சாவு—பிள்ளை மார்க்கெட் என்று பத்திரிகையில் வந்து விட்டால் உடனே எம். எல். ஏ.க்களும், பிரபல சர்க்கார் அதிகாரிகளும் சம்பவம் நடந்த ஸ்தலத்திற்குச் சென்று விசாரித்துப் பத்திரிகை வாயிலாக அறிக்கை விடுகிறதைக் காண்கிறோம். "பட்டினிச் சாவு" என்பதற்கு சர்க்கார் பாஷையில் அர்த்தம் என்ன? அதாவது கையில் பணம் இருந்தும் ரேஷன், உணவுப் பொருள்கள் கிடைக்காது உயிர் விட்டால்தான் அது பட்டினிச் சாவு என்று சொல்வதா! அல்லது பிச்சைக்காரர்கள் அன்னமின்றி மடிந்தால் அது பட்டினிச் சாவு இல்லையா! சர்க்கார் நம் நாட்டில் ஒருவரையும் பட்டினியால் மடிய விடமாட்டோம் என்று சொல்கின்றனரே, இப்போது நம் நாட்டில் எத்தனை நடுத்தர, ஏழைக் குடும்பங்கள் இன்று பிச்சை எடுக்கும் பிழைப்பில் இறங்கி விட்டன! எத்தனை தாய்மார்கள் கைக்குழந்தைகளுடன் பிச்சை எடுக்கின்றனர்! பஸ் ஸ்டாண்டுகள், ரயிலடிகள், காப்பிக் கிளப்புகள் போன்ற அநேக இடங்களில் எத்தனை பேர் பிச்சை யெடுத்து உயிருக்கு மன்றாடுகின்றனர்! இவர்களுக்குச் சர்க்கார் ஏதேனும் வழி செய்து பட்டினிச் சாவு ஏற்படவிடாமல் செய்யுமா! பழியொரு பக்கம் பாவமொரு பக்கம் என்பது போல, பஞ்சம் என்று சாக்குச் சொல்லி ஜிங்கினிமாக்களுக்குச் சில ஊர்களில் லைசென்ஸ் மறுக்கப்பட்டு வருகிறதாம். இதனால் பஞ்சம் ஒழிந்து விடுமா! சினிமாக்களில் உள்ள தொழிலாளர்களுக்கும் மேற்படி பட்டினிப் பிணி தெரியட்டும் என்ற எண்ணத்துடன் செய்வதாயிருக்கலாமோ!

திருப்பூர்
10—9—50 ஆர். கே. வேலு

○●○

## செயலில் காட்டவேண்டும்

"இலங்கையில் ஒரு வாரம்" என்ற கட்டுரையில் இலங்கையில் அரிசிபடி ஆறு அணா என்று படித்து ஆச்சரியப்பட்டேன். இந்தியாவைப் போல் அந்த நாடும் உணவு தான்யங்களில் பற்றாக்குறை நாடுதான். ஆனால் அவர்கள் உணவுப் பிரச்னைக்கு முதல் ஸ்தானம் கொடுத்து ஏற்றுமதியினால் கிடைக்கும் பணத்தில் உணவு தானியங்களைத் தருவிக்கிறார்கள். ஏற்றுமதியிலிருந்து கிடைக்கும் பணத்தைக் கொண்டு இந்திய சர்க்காரும் வேண்டிய தானியங்களைத் தருவிக்க முடியும்.

இதற்கு இரண்டு காரியங்களை உடனே செய்ய வேண்டும். அவைகள்: (1) 1951ல் உணவு தான்ய இறக்குமதியை நிறுத்துவதாகத் திட்டமிட்டிருக்கிறது. இந்தத் தேதியைக் கொஞ்சம் தள்ளிப் போட்டுவிட்டுத் தானிய உற்பத்தியை அதிகரிக்கச் செயலில் இறங்க வேண்டும். (2) தற்போது பருத்தி, கரும்பு முதலியவைகள் அதிக லாபம் கொடுக்கக் கூடியதானதால், முன்பு நெல் பயிரிட்ட இடங்களில் சிலர் இவைகளைப் பயிரிடுகிறார்கள். இம்மாதிரி நெல் பயிரிடும் விஸ்தீரணம் ஆண்டுதோறும் குறைந்து கொண்டு வருகிறது. ஆகையினால் வேறு நிலங்களில் அவற்றை உற்பத்தி செய்யத் தூண்ட வேண்டும்.

"வாரத்தில் ஒரு நாள் தானியமில்லாத நாள்" திட்டம் மகாநாடுகளில் பேசுவதற்குச் சுலபமாக இருக்கும். ஆனால் இந்தத் திட்டம் ஏழைகளுக்கு உபயோகப்படாது. காய்கறிகளை அதிகம் சாப்பிடும்படி செய்யும் பிரசாரமும் ஏழைகளுக்குப் பலனற்றதுதான். அவர்கள் காய்கறிகள் வாங்கப் பணத்துக்கு எங்கே போவார்கள்!

பெங்களூர்
11—9—50 எம். எஸ். ராமஸ்வாமி

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ தம்பிடி நாணயங்கள் என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ ப. திருவேங்கடத்துக்கும், கேஷ்வர் வேண்டும் என்ற கடிதம் எழுதிய ஸ்ரீமதி கமலா சேஷாத்திரிக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

# லட்சியவாதி

கே. என்.

"நீங்கள் சொல்லுகிற தெல்லாம் வாஸ்தவந்தானா?" என்று செல்வம் ஆச்சரியத்துடன் கேட்டார்.

அவருக்கு எதிரே உட்கார்ந்திருந்த நண்பர், "நான் பொய்யா சொல்லுகிறேன்? இந்த ஊரில் உன்னதமான பிரசங்கங்களைச் செய்து கொண்டிருந்த போதே அவரை எனக்கு நன்றாகத் தெரியும். பார்த்து நாளாயிற்றே என்று போனேன். இரண்டே நாளில் 'சீ! இவ்வளவுதானா?' என்று தோன்றி விட்டது. உடனே புறப்பட்டு விட்டேன். என்ன இருந்தாலும் செயலில் காட்ட முடியாதவர்கள் அவ்வளவு பேசக் கூடாது!" என்று ஒரு போடு போட்டார்.

செல்வத்தால் நம்பவே முடியவில்லை. "சிவகாமிநாதனா இவ்வளவு மோசமாக நடந்து கொள்கிறார்?" என்று மலைப்புத் தட்டியது.

செல்வமும் சிவகாமிநாதனும் ஒன்றாக வைத்தியக் கல்லூரியை விட்டு வெளியே வந்தவர்கள். இருவரும் சேர்ந்தே சென்னையில் தொழிலை ஆரம்பித்தார்கள். செல்வம் தொழிலை எப்படி வளரச் செய்வது, எவ்விதம் நோயாளிகளைச் சேர்ப்பது என்பது போன்ற விஷயங்களில் உற்சாகமாக இருந்தார். ஆனால் சிவகாமிநாதனின் மனமோ நேர் எதிராகத் திரும்பியது.

"வைத்தியத் தொழில் புனிதமானது. உலகத் தொண்டுக்கு ஏற்றது. அதைப் பணத்திற்கு அடிமைப் படுத்தக் கூடாது. வைத்தியம் செய்பவன் வியாதியைப் போக்குவதில் ஊக்க முள்ளவனாக இருக்கவேண்டுமே யன்றிப் பணத்தில் 'மனதைச் செலுத்தக் கூடாது'" என்று சதா சர்வ காலமும் சொல்லிக் கொண்டிருந்தார். வைத்திய சாஸ்திரத்தில் அவர் செல்வத்தை விடக் கெட்டிக்காரர். கைராசியும் அதிகம். மனம் வைத்திருந்தால் பணத்தைக் குவித்திருக்கலாம்.

ஒரு நாள் வைத்தியர்கள் சங்கத்தில் கூட்ட மொன்று நடந்தது. அதில் சிவகாமிநாதன் 'டாக்டரும் நாட்டு நலமும்' என்பதைப் பற்றிப் பேசினார். ஆரம்பத்திலிருந்து கடைசி வரை சபையோர்களைக் கட்டுப்படுத்திக் கற்சிலை போல் உட்காரச் செய்து விட்டது அந்த ஆவேசப் பேச்சு.

"உண்மையான வைத்தியனாக இருக்க வேண்டு மென்றால் ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு கிராமத்திற்குப் போங்கள். தரும வைத்தியம் செய்யுங்கள். ஊர்க்காரர்கள் தாங்களாகக் கொடுத்ததைப் பெற்றுக் கொள்ள வேண்டுமே யன்றி நீங்களாகக் கேட்கக் கூடாது. வருஷந்தோறும் தேறி வருபவர்களில் பத்துப் பேர் இவ்விதம் சென்றால் மரண விகிதம் வெகு சீக்கிரம் குறைந்து விடும்."

இப்படிச் சிவகாமிநாதன் கூறியதும் சபையில் ஒருவர் நடுவில் எழுந்து "நீங்கள் வழி காட்டுவீர்களா? அந்தத் தைரியம் உங்களுக்கு உண்டா?" என்று கேட்டார்.

செல்வம் மகாபாரதத்தில் பீஷ்மர் சபதம் செய்ததைப் பற்றிப் படித்திருக்கிறார். மெய்சிலிர்ப்பையும் அனுபவித்திருக்கிறார். அதைவிடப் பன்மடங்கு மயிர்க்கூச்சலை அந்தக் கூட்டத்தில் சிவகாமிநாதன் சபதம் செய்த போது அடைந்தார்.

சிவகாமிநாதன், "நல்ல கேள்வி கேட்டீர்கள்! நான் வாய்ச் சொல்லில் வீரன் என்பதுதானே உங்கள் எண்ணம்? இன்று முதல் பணத்திற்காகத் தொழில் நடத்த மாட்டேன். இரண்டாவதாக வைத்தியன் என்ற முறையில் சென்னைக்குத் திரும்ப மாட்டேன். எங்கள் கிராமத்திற்குப் போவேன்! நான் உங்களைச் செய்யச் சொன்னவற்றை யெல்லாம் செய்து காட்டுவேன். பட்டினி கிடந்து இறந்தாலும் சரி!" என்று சபதம் செய்தார். கேள்வி கேட்டவர் அங்கு இருக்க வெட்கப்பட்டுக் கொண்டு எழுந்து போய் விட்டார்.

எல்லோரும் அவ் வார்த்தைகள் ஆவேசத்தில் பிறந்தவை என்று நினைத்தார்கள். ஆனால் மறுநாளே அவர் தமது குடும்பத்தோடு சொந்த கிராமத்திற்குக் கிளம்பியதும்தான் "எப்பேர்ப்பட்ட தியாகம் செய்து விட்டுப் போகிறார்!" என்பதை உணர்ந்தார்கள். அன்று முதல் செல்வத்திற்கு அவரிடம் அலாதியான பக்தி உண்டாகி விட்டது. கூடப் படித்தவர் என்பதையும் மறந்து "லட்சத்தில் ஒருவராகப் பிறந்த உத்தமர்" என்று மரியாதையுடன் பேசத் தொடங்கினார்.

அந்த உத்தமர் சிவகாமிநாதனைப் பற்றி அவதூறான வார்த்தை காதில் பட்டதும் அவருக்குச் சட்டென்று நம்பிக்கை யுண்டாகவில்லை. ஆனால் நேரில் பார்த்து விட்டு வந்தவர் மூன்று தரம் அழுத்திச் சொன்னதும் அவருக்குச் சந்தேகம் தோன்றியது. "இருக்குமோ என்னமோ? மனிதப் பிறவியில் இதுவும் சகஜம்தானே?" என்று

நினைத்துக் கொண்டார். ஆனால் அவர் மனம் கொஞ்சமும் திருப்தியடையவில்லை. அன்று பகல் முழுவதும் அதைப் பற்றியே சிந்தனை செய்து கொண்டிருந்தார்.

அன்று மாலை அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. "நேரில் போய்ப் பார்த்து உண்மையைக் கண்டு பிடித்தால் என்ன? சிவகாமிநாதனையும் பார்த்தது போலிருக்கும்" என்று தீர்மானித்து ராஜிபுரத்திற்குக் கிளம்பினார்.

கதிராமங்கலம் ஸ்டேஷனில் இறங்கி மாட்டு வண்டியில் ராஜிபுரத்தையடையும்போது மணி ஏழாகிவிட்டது. ஊருக்குள் நுழைவதற்கு முன் ஆசிரமம்போலிருந்த ஒரு வீடு அவர் கண்களில் பட்டது. அதன் வாசலில் "சிவகாமிநாதன் தரும வைத்தியசாலை" என்று ஒரு பலகை தொங்கியது. செல்வம் அதைக் கண்டதும் தாம் கேள்விப் பட்டதெல்லாம் பொய்தான் என்று தீர்மானமாக நினைத்துக் கொண்டார். ஆனால் அடுத்த விநாடி அந்தத் தெளிவு மறைந்துவிட நேர்ந்தது. காரணம், திறக்கப்படாத கதவுக் கடியில் ஆணும் பெண்ணுமாக வியாதியஸ்தர்கள் காத்துக் கிடந்த காட்சி அவர் கண்ணில் பட்டதுதான். அந்தக் காட்சியைக் கண்டதும் பலகையிலிருந்து ஒவ்வொரு எழுத்திலும் அகம்பாவம் தொனிப்பதாகச் செல்வம் கற்பனை செய்து கொண்டார். "'வியாதிகளை ஊரைவிட்டே ஓட்டி விடு



ஒருவர்:—இந்த ராவ் பகதூர் சுத்தக் கருமி, ஐயா! தம்பிடி பெறாதவன். அவர் போகும் போது அத்தனை சொத்தும் கூட வராது என்று யாரேனும் அவருக்குச் சொல்லப் படாதா?

மற்றவர்:—சொல்லவே படாது. சொத்து கூட வராது என்று தெரிந்தால் அவர் போகவே மாட்டார்!

கிறேன்' என்று சிவகாமிநாதன் சொன்னதெல்லாம் வாய்ப்பேச்சுத்தானா?" என்று வெறுப்பு உண்டாயிற்று.

வண்டிக்காரன் தானாகவே 'டாக்டரய்யா வீட்டு' வாசலில் கொண்டு போய் நிறுத்தினான். பெட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு செல்வம் படியேறிச் சென்றார். வாசல் பக்கம் வந்த சிவகாமிநாதன் அவரைக் கண்டதும் குதூகலமாகக் குழந்தைபோல் ஓடிவந்து கட்டித் தழுவிக் கொண்டார். "என் நண்பன் செல்வமா? நிஜமாகவே செல்வம்தானா?" என்று உணர்ச்சி மிகுதியில் அவர் சொன்னதைக் கேட்டதும் செல்வத்தின் சந்தேகம், வெறுப்பு எல்லாம் அடியோடு ஆழத்தில் புதைந்து உள்ளத்தில் பழைய நிறைவு உண்டாயிற்று. "சீ! இவ்வளவு வெள்ளை மனம் படைத்தவரைப் போய்ச் சந்தேகித்தோமே?" என்று தம்மையே நொந்து கொண்டார்.

ஆனால் இந்த மன நிலையும் சீக்கிரமே கலைந்து விட்டது.

"மயில்பட்டி மிராசுதார் குடும்பத்தையே நான்தான் காப்பாற்றினேன். பெரிய வெள்ளித் தட்டு ஒன்றைப் பரிசாகக் கொடுத்தார்கள். புதுச்சத்திரம் தாசில்தார் விஷ ஜுரத்தில் போயிருக்க வேண்டியது. நான் போனேன், யமன் ஓடிவிட்டான். இன்று எந்தக் காரியமாயிருந்தாலும் அவருக்கு ஒரு வார்த்தை சொல்லியனுப்பினால் போதும். கதிராமங்கலம் ரைஸ் மில் முதலியார் மாப்பிள்ளை நிமோனியாவில் விழுந்தான்......" என்று சொல்லிக் கொண்டே போனவர் டக்கென்று நின்றார்.

"மறந்தே விட்டேனே, செல்வம்!" என்று எழுந்து போய் ஒரு அழைப்புத்தாளை எடுத்து வந்து அவரிடம் கொடுத்தார். அதில் கதிராமங்கலம் பொதுச் சங்கத்தின் ஆதரவில் ஏழைபங்காளனும் கர்ம வீரனுமான சிவகாமிநாதனுக்குக் 'கருணைச் செல்வன்' என்ற பட்டம் வழங்கப் போவதாகப் போட்டிருந்தது.

"பட்டணத்தை விட்டு வந்ததும் எனக்கு எவ்வளவு கீர்த்தி வந்துவிட்டது, பார்த்தாயா? மாசம் இருபதாயிரம் முப்பதாயிரம் என்று சம்பாதிக்க வேண்டியவன் எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட்டுப் பொதுத் தொண்டுக்காக வந்துவிட்டேன் என்று அவ்வளவு மதிப்பு வைத்திருக்கிறார்கள். இந்தத் தாலுக்காவிலேயே என் வார்த்தைக்கு ரொம்ப மதிப்பு. கிராமத்து ஆள் யாராவது என்னைக் கண்டால் கீழே விழுந்து நமஸ்காரம் செய்கிறான். இதற்கு முன்னால் ஒரு அரைகுறை ஆயுர்வேத டாக்டர் இருந்தானாம். அவனிடம் படாத கஷ்டங்களைப் பட்டிருப்பதால்

என்னைக் கண்ட மாத்திரத்தில் இந்த ஊர் ஜனங்களுக்கு கடவுளே நேரில் வந்து விட்டது போல் தோன்றிவிட்டது."

செல்வத்திற்குப் 'போதும், போதும்' என்றாகி விட்டது. "பேஷ், பேஷ்! பணத்திற்காக வைத்தியம் செய்யாத லட்சியம் வெகு அழகாக இருக்கிறது!" என்று எண்ணிக் கொண்டார்.

"மிஸ்டர் சிவகாமிநாதன், நாழிகை ஆகவில்லையா? நான் வரும்போதே ஆஸ்பத்திரி வாசலில் நிறையப் பேர் காத்துக் கொண்டிருந்தார்கள்" என்றார் செல்வம், மிகவும் நாசூக்காக.

"அவர்களுக்கு வேறே வேலையே கிடையாது. தரும வைத்தியசாலை என்றதும் பொழுது போகிறதற்காக எதையாவது சொல்லிக் கொண்டு வருகிறார்கள். உண்டியில் போடுகிற பணம் கம்பவுண்டரின் சம்பளத்திற்கும் மருந்தின் விலைக்கும் கூடப் போதமாட்டேனென்கிறது. நான் சொல்லுகிறேன், செல்வம்! இனமாக எது கிடைத்தாலும்விடமாட்டார்கள் நம்ஜனங்கள். நல்ல படிப்பு நம்மவர்களிடையே பரவனும்" என்றார் சிவகாமிநாதன்.

செல்வம் ஆழ்ந்த யோசனையில் இறங்கியிருந்தார். சிறிது நேரம் கழித்து அவருடைய நண்பர் வைத்தியசாலைக்குக் கிளம்பினார். செல்வத்தையும் கூட அழைத்துக் கொண்டு போனார்.

போகிற வழியில் எதிர்ப் பட்டவர்கள் எல்லோரும் அவரைக் கண்டு தலையைக் குனிந்து கையைக் கூப்பினார்கள். இதற்கெல்லாம் சிவகாமிநாதன் செய்த பதில் வணக்கம் ஒரு புன்னகையும் தலையை ஒரு விதமாக அசைத்ததும்தான். செல்வத்திற்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது.

ஆஸ்பத்திரியில் பழைய கூட்டம் இல்லை. கம்பவுண்டர் குரல் மட்டும் உரக்கக் கேட்டது.

"ஜுரம் நிற்கவில்லை யென்றால் செத்துப் போயேன். உண்டியில் பணம் போடாமல் தினம் வந்து நிற்கிறாயே? நாளைக்கு வராதே, போ!" என்று யாரையோ விரட்டிக் கொண்டிருந்தான். சிவகாமி நாதனையும் செல்வத்தையும் கண்டவுடன்தான் ஓய்ந்தான்.

"என்ன சமாசாரம்?"

"ஒன்றுமில்லை, ஸார்! தருமம் என்று ஆரம்பித்தால் சோம்பேறிகள்தான் முதலில் வந்து நிற்கிறார்கள். வைத்தியத்தில் கூட அப்படித்தான். இவனுக்கு நிறைய பணம் வருகிறது. உண்டியில் போடமட்டும் காசில்லையாம்!" என்று கம்பவுண்டர் வியாக்கியானம் செய்தான்.

"சரிதான். பார்க்க வேண்டிய முக்கிய கேஸ் ஏதாவது உண்டா?"



தாயார்:—ஏண்டி சாவித்திரி! நல்ல கடிநாசு வந்த உடனே முன்ஷி படத்துக்கு எதிரிலே வந்து கன்னத்தில் போட்டுக் கொண்டு நிற்கிறாயே?

சாவித்திரி:—அந்த மகராஜன் தயவிலேதானே எட்டு அவுன்சு, ஆறு அவுன்சாகி, பட்டணத்தில் ஹோட்டலிலே சாப்பிடுகிறவர்களுக்கு மூன்று அவுன்சாச்சு? அதனால்தானே நம் அத்தானுக்கு ஹோட்டல் சாப்பாடு 'சீ'ன்னு போய், இத்தனை நாளைக்குப் பிறகு கல்யாணத்தைப் பற்றி நினைத்து லெட்டர் எழுதியிருக்கிறார்? என்றென்றைக்கும் நான் முன்ஷியை மறக்கலாமா, அம்மா?

---

கம்பவுண்டர் பெஞ்சியைச் சுட்டிக் காட்டினான். ஒரு கிழவனும் ஒரு சிறு பெண்ணும் உட்கார்ந்திருந்தார்கள். முகத்தைக் கண்டதும் பெண்ணுக்குக் கடுமையான ஜுரம் அடித்துக் கொண்டிருந்தது என்று தெரிந்தது. தலைவலியைத் தாங்க முடியாமல் தலையை இரு கைகளாலும் பிடித்தவண்ணம் அழுதுகொண்டிருந்தாள்.

சிவகாமிநாதன் அவர்களருகில் போய், "என்னப்பா, மருந்தைச் சரியாகக் கொடுத்தாயா? நீ கொடுத்திருக்க மாட்டாய். கொடுத்திருந்தால் ஜுரம் பதினைந்து நாளாய்த் தொடர்ந்து அடிக்குமா?" என்று கடுகடுப்புடன் கேட்டார்.

"தினம் கொடுக்கிறேனுங்க. கொஞ்சம் நன்னா கவனிச்சுப் பாருங்க" என்று கிழவன் கெஞ்சினான்.

"ஓகோ! இத்தனை நாளாய்க் கவனிக்காமலா மருந்து கொடுத்தேன்! ஆறு

காலைக்கு இதே மருந்தைக் கொடு. ஜவ்வரிசிக் கஞ்சிதான் கொடுக்கணும்."

"சவ்வரிசியே கிடைக்கல்லீங்க. புழுங்கரிசித் தெளிவு கொடுக்கக் கூடாதுங்களா!"

"வைத்தியம்தான் இனாமாப் பண்ண முடியும். உன் வீட்டுக்கு வேணுமென்கிற ஜவ்வரிசி, சர்க்கரை எல்லாத்தையும் கூடக் கொடுக்கமுடியுமா? ஜவ்வரிசிதான் கொடுக்க வேணும். இல்லாவிட்டால் என்னைக் கேட்காதே" என்று சொல்லி விட்டு டாக்டர் அடுத்த ஆள் மேல் பார்வையைத் திருப்பினார்.

இருவரும் வீட்டுக்குத் திரும்பினார்கள். செல்வம் அன்றே புறப்பட வேண்டும் என்று தீர்மானம் செய்து கொண்டார்.

"கதிராமங்கலத்தில் சாயந்திரம் கூட்டம் இருக்கிறது. நீயும் என்னுடன் வந்து விடு. கதிராமங்கலம் ஸ்டேஷனிலேயே ரயில் ஏறிவிடலாம். பெரிய பெரிய ஆளையெல்லாம் உனக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன்" என்று சிவகாமிநாதன் வற்புறுத்தினார்.

அன்று பகல் முழுவதும் யார் யாரோ சிவகாமிநாதனைப் பார்க்க வந்தார்கள். மாடியில் சிரிப்பும் கொம்மாளமுமாக இருந்தது. இழவு தூங்குவது போல் பாவனை செய்த செல்வம் தம் நண்பரை மனதிற்குள் சபித்துக் கொண்டிருந்தார்.

அப்போது ஒரு ஆள் மூச்சு வாங்க உள்ளே ஓடிவந்தான். முற்றத்தருகில் நின்று கொண்டிருந்த பார்வதியின் காலில் தடாலென்று விழுந்தான்.

"அம்மா, தாயே! என் பொண்ணுக்கு டாக்டரய்யாதான் உசிரு கொடுக்கணும். நினைவு தப்பிப் போச்சம்மா!"

"என்னடா, சமாசாரம்?"

"ஜுரம் சாஸ்தியாயிடுத்து, அம்மா! காலையிலே காட்டி மருந்து வாங்கிட்டுப் போனேன். இப்போ நினைவு தப்பிப் போச்சு. டாக்டரைய்யா கிருபை செய்து குடிசைக்கு வந்து பார்த்தாரின்னா......" என்று வந்தவன் கதறினான்.

"ஐயா பெரிய மனுஷங்களோடே பேசிண்டு இருக்கிறார். களைப்பு வேறே. கம்பவுண்டர் ஐயா கிட்டே மருந்து வாங்கிக் கொள்ளச் சொன்னாரு. போ, வெள்ளிக் கிழமையும் அதுவுமாக இங்கே அழாதே!" என்றாள் அவள்.

செல்வம் எழுந்து போய்ப் பார்த்தார். காலையில் பார்த்த கிழவன்தான் ரேழியில் திக்பிரமையுடன் உட்கார்ந்திருந்தான். அவன் முகம் வெளிறிப் போயிருந்தது.

ஒரு நிமிஷம் தயங்கிவிட்டுச் செல்வம் தன் நண்பரின் மருந்துப் பெட்டியை எடுத்துக் கொண்டு கிளம்பினார்.

"ஐயா என்னை அனுப்பியிருக்கிறார். நானும் டாக்டர்தான்."

கிழவன், "டாக்டரய்யா நன்றாயிருக்கணும்" என்று வாழ்த்திவிட்டு வேகமாகக் கிளம்பினான்.

காலையில் கண்ட பெண்தான் நினைவில்லாமல் கிடந்தாள். மோசமான 'கேஸ்' என்றே தோன்றியது. செல்வம் பெட்டியைத் திறந்து பார்த்தார். நல்லவேளையாக 'கோரமைன்' இருந்தது. இன்னொருவர் வைத்திருக்கும் மருந்து என்பதையும் மறந்து விட்டு அதை 'இஞ்ஜெக்ஷன்' செய்தார். பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு நம்பிக்கை வந்தது.

"நீங்களும் டாக்டரய்யாவும் நன்றாயிருக்கணும்!" என்று கிழவன் உணர்ச்சி மிகுதியோடு சொன்னான். பக்கத்துக் குடிசைகளிலிருந்தும் ஜனங்கள் வந்து கூடியிருந்தார்கள். "ராமருக்கு லட்சுமணர் கிடைச்சாப்போலே நம்ம டாக்டரய்யாவுக்கு இவர் கிடைச்சாரே!" என்று யாரோ உபமானம் சொல்லிக் கொண்டார்கள். செல்வம் எல்லாவற்றையும் அரைகுறையாகக் காதில் போட்டுக் கொண்டு கிளம்பினார்.

மறுபடியும் சிவகாமிநாதனை நேருக்கு நேர் பார்க்க அவர் விரும்பவில்லை. வீட்டிற்குச் சென்று தன் கைப் பெட்டியை எடுத்துக் கொண்டு கதிராமங்கலம் ஸ்டேஷனை நோக்கிக் கால் நடையாகச் சென்றார். சிவகாமிநாதனைப் பற்றிய நினைவுகளை அந்த நிமிஷம் முதல் விட்டொழிக்க வேண்டும் என்ற தீர்மானம்தான் அவர் மனதில் எஞ்சி நின்றது. லட்சியப் பாதையில் கால் வைக்காதவர்களைப் பற்றி ஒருவரும் ஒன்றும் நினைப்பதற்கில்லை. ஆனால் கம்பீரமாகக் காலை வைத்து விட்டு வழுக்கி விழுந்தவர்களைப் பற்றி இழிவு தோன்றுவது சகஜம்தானே?

ஆறு மாதங்கள் கழித்துச் சிவகாமிநாதனிடமிருந்து அவருக்கு ஒரு நீண்ட கடிதம் வந்தது.

அதன் முடிவில் அவர் எழுதியிருந்தார்: "தொண்டனாகப் போக வேண்டுகிறவன் கர்வத்தை விட்டொழிக்க வேண்டும். அகந்தை நம்மைச் சிறிது தூரம் ஆகாயத்தில் கொண்டுபோய்க் கை விட்டுவிடும். பிறகு தலை குப்புற விழ வேண்டியதுதான். இந்த உண்மையை நன்றாக அனுபவித்துப் புரிந்து கொண்டேன்.

ஒரு வழியில் சென்று கொண்டிருக்கும் ரயிலை ஒரு சிறு விசை மூலம் 'பாயிண்ட்ஸ் மென்' வேறொரு பாதையில் திருப்பி விடுகிறான் அல்லவா? அதுபோல் நீ எனக்காகச் சேரிக்குப் போய் வைத்தியம் செய்த செய்தி என்னை மறுபடியும் லட்சியப் பாதையில் திருப்பி விட்டது. இந்தத் தெளிவு நீடிக்க வேண்டுமென்று கடவுளை வேண்டிக் கொள்ளுகிறேன்."

# கடை முதலாளிகள் மற்றும் வீட்டுக்காரர்கள் காஷியர்கள் மற்றும் நகை வியாபாரிகள்.

கஷ்டப்பட்டுச் சம்பாதித்த உங்கள் பணம், மற்ற விலையுயர்ந்த சாமான்கள் முதலியவைகளைத் திருட்டு, தீ விபத்து, மூட்டுப்பூச்சி, எலி முதலியவைகளால் அழிவதற்கு முன் இந்த சுலபமாக உபயோகிக்கக்கூடிய நம்பிக்கை வாய்ந்த சேமிப்புப் பெட்டிகளில் வைத்துப் பூட்டிப் பத்திரப்படுத்துங்கள். இக்குறைந்த விலைகளில் இவ்வளவு அதிகமான சௌகரியங்கள். சிக்கனமான அதிக உற்பத்திக்கு வந்தனம்.



**கோத்ரெஜ்**
**எக்கு பண நகைப் பெட்டி**

தனியாக கழற்றக் கூடிய பெட்டியின் அடி பாகம், பெட்டியைப் பூட்டிய பின் கவுண்டரிலோ அல்லது அலமாரிக்குள்ளோ பொருத்துவதை சாத்திய மாக்குகிறது.
பாதுகாப்பு மிக்க தயாரிப்பாளரிடமிருந்தே வாங்குங்கள்.

**ரூ. 70**
(டிரேயுடன்) 14" X 10" X 6"

## Godrej Regd. கோத்ரெஜ்

**கோத்ரெஜ்**
**பேடண்டு எக்கு பணப் பெட்டி**

அலமாரிக்குள்ளும் கவுண்டரின் மேலும் அசைக்க முடியாதபடி பொருத்தக் கூடியது.

**ரூ. 90**க்கு இப்பொழுதே உங்கள் வசமாகிவிடும்
(14" X 12" X 10")



**கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி, லிமிடெட்.**

மதராஸ்: 164, பிராட்வே. பெங்களூர்: கமிஷன் & ஜெனரல் ஏஜன்ஸி, 180, நரசிம்மராஜா ரோடு. கோயமுத்தூர்: கமிஷன் & ஜெனரல் ஏஜன்ஸி, பெரிய கடைத் தெரு. திருச்சிராப்பள்ளி: ஸ்ரீ S. T. Rm. Ct. ஜம்புலிங்கம் செட்டியார், 2, சின்னக் கடைத் தெரு, தெப்பக்குளம். மதுரை: S. R. S. பிரதர்ஸ், கிழக்கு சித்திரை வீதி. பெஜவாடா: P. ஓபுல் ரெட்டி & கோ., காந்திநகர். ராஜமஹேந்திரபுரம்: ஸ்ரீ S. B. P. V. செல்லபதி ராவ், மெயின் ரோடு. கொச்சி: S. கோடார், போர்ட். திருவனந்தபுரம்: S. கோடார், மெயின் ரோடு. கொழும்பு: சாஸ் கௌல்ட்ஸன் லிட்., த. பெ. நெ. 217.

REGD. No. M. 4392

# டால்டாவில்

## பொரித்த மசாலாதிணித்த குடமிளகாய்களினால் உங்கள் உணவை அதிக சத்துடையதாகச் செய்யுங்கள் !

தேக ஆரோக்கியத்திற்கு அவசியமான தாதுப்பொருள்களும், விட்டமின்களும் குடமிளகாய்களிலிருக்கின்றன. அவைகளை இப்படி தயாரித்து சாப்பிடுங்கள். முதலாவதாக, மிளகாய்களை நீராவியில் வெந்து காம்பு பாகத்தை நறுக்கி விதைகளை அகற்றவும். பிறகு வேகவைத்தபட்டாணி, காரட் அல்லது வெந்து பொடிசெய்த முட்டை, வெந்து உதிர்த்த உருளைக்கிழங்கு அல்லது வெந்து நறுக்கப்பட்ட மாமிசம் இவைகளுடன் அரிந்து வதக்கிய வெங்காயம், நறுக்கிய இஞ்சி, கொத்தமல்லி இலை, கடுகு, உப்பு, எலுமிச்சைச்சாறு இவைகளைகலந்து மசாலாசெய்து அதனுட் திணிக்கவும். காம்பு பாகத்தை மிளகாய்களின் மேல் வைத்து குச்சிகளினால் பொருத்தவும். குழிவுநிறைந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி அதில் மிளகாய்களை பக்குவமாகும்வரை பொரிக்கவும்.
டால்டா ஒரு சுத்தமான தாவரக்கொழுப்பாகையால் அது அதிக நேரம் சூட்டைத்தாங்குகிறது—எனவே, உணவுகள் முழுமையாக முழுவதும் பக்குவமாவதற்கு போதுமான சவகாசம் அளிக்கிறது.

எதிர்பாராத அதிதிகளுக்கு
நொடிப்பொழுதில் உணவு!

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது
எப்பொழுதும்—எழுதுங்கள்!

தி டால்டா அட்வைஸரி ஸர்விஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




HVM. 110-413 TM